


UGC CARE Listed Journal

E-ISSN: 2581-7140






# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

மற்றும்

## குறள்நெறிக் கழகம்

விருதுநகர்

## Kural Neri Kazhagam

**Virudhunagar**

இணைந்து நடத்தும்

## திருவள்ளுவர் திருநாள் விழா கருத்தரங்கம்

நாள் : திருவள்ளுவர் ஆண்டு 2051, தை 2, 16.01.2020

கருத்தரங்க இணைய ஆய்வுக்கோவை வெளியீடு 15.07.2020

நிகழிடம்: அறிவியல் மன்றம், விருதுநகர்.

# திருக்குறளின் பன்முகச் சிந்தனை

# MULTI-FACETED THOUGHT OF THIRUKKURAL

**தொகுதி - 3, சிறப்பிதழ் 1 ஜீலை 2020**

**Vol – 3, SPECIAL ISSUE 1 JULY 2020**




UGC CARE Listed Journal

E-ISSN: 2581-7140






# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

மற்றும்

## குறள்நெறிக் கழகம்

விருதுநகர்

## Kural Neri Kazhagam

**Virudhunagar**

இணைந்து நடத்தும்

## திருவள்ளுவர் திருநாள் விழா கருத்தரங்கம்

நாள் : திருவள்ளுவர் ஆண்டு 2051, தை 2, 16.01.2020

கருத்தரங்க இணைய ஆய்வுக்கோவை வெளியீடு 15.07.2020

நிகழிடம்: அறிவியல் மன்றம், விருதுநகர்.

# திருக்குறளின் பன்முகச் சிந்தனை

# MULTI-FACETED THOUGHT OF THIRUKKURAL

**தொகுதி - 3, சிறப்பிதழ் 1 ஜீலை 2020**

**Vol – 3, SPECIAL ISSUE 1 JULY 2020**

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**International Journal of Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**.**

**International Journal of Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world. In achieving the aim, our journal **International Journal of Tamil Language and Tamil Studies** has been listed in **UGC CARE List on July 2020.**

## Disclaimer

**International Journal of Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics. **Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

## Message from the Editor-in-Chief

**International Journal of Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area. Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal. I am glad to say that our journal has been approved in the UGC CARE List. It is an achievement by the clear protocol of academic and ethical policies maintained by the journal and I thank the authors for their original articles with proper ethical writing methods.

**Publisher, Director and Editor**
**D.Maheswari**

# அணிந்துரை



**முனைவர் கா.ஸ்ரீதர்,**
தலைவர் & உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழ்த்துறை,
செயலாளர், குறள்நெறிக் கழகம்,
வி.இ.நா.செந்திக்குமார நாடார் கல்லூரி,
விருதுநகர் - 626001,
தமிழ்நாடு, இந்தியா.

விருதுநகர், **“குறள்நெறிக் கழகம்”** சுமார் **26** ஆண்டுகளாகத் திருக்குறளின் சிந்தனையை சமூகத்தில் விதைத்து வருகிறது. இது பேரா.க.திருமாறன் மற்றும் திரு.**T.K.**ஜெகதீசன் ஆகியோரின் கூட்டு முயற்சியால் எழுந்ததே இந்தக் **“குறள்நெறிக் கழகம்”** ஆகும். இக்கழகத்தில் குறள் அமுதம் பருகியவர்கள் எண்ணற்றோர் ஆவர்.

ஆண்டுதோறும் தைமாதம் **2**ஆம் நாள் திருவள்ளுவர் திருநாள் விழா**…** பல இலக்கிய ஆர்வலர்களின் சிறப்புச் சொற்பொழிவு மற்றும் மாணவர்களுக்குப் போட்டிகள் என வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்தாண்டு எல்லாப் பொருளும் இதன் பால் உள**…** என்ற சிறப்புக்கு உரிய திருக்குறளில் உள்ள பல்வேறு சிந்தனைகளை ஒருங்கிணைத்து நூலாக்கம் செய்து ஆவணப்படுத்த வேண்டும் என்றவோர் அவா எழுந்தது. அதன் பொருட்டு **“திருக்குறளின் பன்முகச் சிந்தனை”** என்ற பொருண்மை கொண்ட கருத்தரங்கத்துடன் திருவள்ளுவர் திருநாள் விழா கொண்டாடப்பட்டது. இதில் வள்ளுவத்தில் இடம் பெற்றுள்ள நிகழ்காலத்தை எதிரொலிக்கும் கருத்துக்கள் பரிமாறப்பட்டன.

தமிழ் பேராசிரியர்கள் மற்றும் ஆய்வாளர்கள் ஆய்வு மேற்கொண்டு தருவித்தக் கருத்துக்களைத் தொகுத்துத் **“தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்”** வாயிலாக உலகறியச் செய்யும் முயற்சியின் விளைவே இந்த ஆய்விதழ் ஆகும். இந்த ஆய்விதழில் இடம் பெற்றுள்ள கருத்துக்கள் வள்ளுவத்தின் சிறப்பைப் பதிவு செய்துள்ளன எனலாம்.

# வாழ்த்துரை



**முனைவர் சு.வினோத்**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்தறை,
உறுப்பினர், குறள்நெறிக் கழகம்,
அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி, சிவகாசி - 626123,
தமிழ்நாடு. இந்தியா.

உழவு தொட்டு வான் அமிழ்தம் வரையிலும் வெறும் உணர்ச்சி மொழியால் அன்றி அறிவால் விண்டுரைத்தவன் வள்ளுவன். வெற்று உணர்ச்சி மொழி கொண்டவனைக் கொல்லும். அறிவின் வழிகாட்டுதலே உலகியல் நன்மை என்று உலகிற்கு உரைத்தவன். அதனால்தான் 'பொய்யாமொழிப் புலவன்' என்று பின் வந்த அறிஞர்களால் தலைமேல் வைத்துக் கொண்டாடப்படவும் காரணமானான். எச்சமயத்தாரும் தம் சமயத்தவராய் உரிமைகொண்டாடவும் காரணமானான். சமய எல்லை கடந்தவனைச் சமய எல்லைக்குள் அடக்குவது அறிவீனம். அவன் அறிவின் கருத்துக்களை அவனி பயனுற கொண்டு செல்வதே மானுடக் கடமை.

மானுடக் கடமையை நன்குணர்ந்த **"தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்"**, அறிஞர் பெருமக்களைக் கொண்டு அறிவின் விருந்தை அறிவுலகிற்குப் படைத்தளித்துள்ளது. ஒவ்வொரு உணவும் ஒவ்வொரு சுவை கொண்டமைவது போல் அறிவின் முகவரியாய் அமையும் கட்டுரைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சுவை பயப்பனவாய் உள்ளது. உழவை முதன்மைத் தொழிலாக வள்ளுவர் சுட்டியிருப்பதில் கூட உலகிற்கான அறம் இதுவென்று சுட்டுகின்ற குறிப்பு உள்ளடங்கியுள்ளது. வள்ளுவன் கண்ட ஒரே தொழில் என்று முனைவர் கா.ஸ்ரீதர் கூறியிருப்பது சிந்தனைக்குரியது. வள்ளுவன் பார்வையின் திறத்தால் கண்டதாக மட்டும் அல்லாது அனுபவத் திறத்தால் கண்டுணர்ந்து சொன்னது என்றும் பொருள் கொள்ள இடமுள்ளது. குடிசெயல் வகைக்கு அடுத்தபடியாக உழவை வைத்திருப்பதில் முறைமையின் அழகு உள்ளது. ஆளும் வேந்தனுக்கு எச்சரிக்கை அறிவிப்பு போல்தான் வள்ளுவர் உழவு அதிகாரத்தை அமைத்துள்ளார்.

பேச்சு, கல்வி, மருத்துவம், உழவு போன்றவற்றை வெறும் தகவல் எடுத்துரைப்பாக மட்டும் அல்லாமல் துறைசார் தொழில்நுட்பம் உரைக்கின்ற வகையிலும் அனுபவமாக்கிக் காட்டி பயிற்சி வழங்குகின்ற வகையிலும் அதிகாரமாகச் செய்துள்ளார். இத்தன்மையினால்தான் நவில்தோறும் நூல் நயம் போலும், தொட்டணைத் தூரும் மணற்கேணி போலும் புதுப்புது சிந்தனைகளை நாளும் தோற்றுவித்தபடி உள்ளது திருக்குறள். இக்கருத்துக்களைத் தொட்டெழும் ஆய்வு அறிஞர்களின் சிந்தனைக் கட்டுரைகளை வெளியிடும் **"தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்"** மற்றும் விருதுநகர், குறள்நெறிக் கழகத்தாரின் சேவைகளை வாழ்த்துகிறேன்.

# பதிப்புரை மற்றும் நன்றியுரை



**திருமதி. த.மகேஸ்வரி,**
இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர் (IJTLLS),
தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,
விருதுநகர் - 626 001.

தமிழ்மொழி மற்றும் இலக்கியத்திற்காக எமது **தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்** (IJTLLS) தம் இலக்கிய மற்றும் ஆராய்ச்சி அரும்பணியைச் செய்து வருகின்றது.

**"திருக்குறளின் பன்முகச் சிந்தனை"** என்ற பொருண்மையில் கருத்தரங்கம் நடத்தி அதை எமது ஆய்விதழ் வாயிலாக வெளிக்கொணர ஒப்புதல் அளித்த "**குறள்நெறிக் கழகம்",** விருதுநகர் நிர்வாகத்தினர் அனைவருக்கும் நன்றி.

இக்கருத்தரங்கத்தின் ஓர் அங்கமாக "**தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்"** (IJTLLS) செம்மையாய் செயல்பட்டு ஆய்வுக் கட்டுரைகளை இணையத்தில் பதிப்பு செய்து உள்ளது. எதிர்காலத்தில் தமிழ் ஆராய்ச்சிகளை உலக அரங்கத்திற்கு எடுத்துச் செல்ல ஓர் ஆய்வுக்களமாக எமது இதழ் செயல்பட்டு வருகிறது. அதற்கு உறுதுணை அளித்த அனைவருக்கும் நன்றி.

கருத்தரங்கில் தமது ஆய்வைச் செம்மை நிறுத்தி **"திருக்குறளின் பன்முகச் சிந்தனை"** என்ற பொருண்மையில் கிடைத்த தரவுகளைக் கட்டுரைகளாக வழங்கி சிறப்பித்த தமிழ்ப் பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், தமிழ் ஆர்வலர்கள் மற்றும் ஆராய்ச்சி மாணவர்களை மனதாரப் பாராட்டுகிறோம்.

**நன்றி!**

## பொருளடக்கம்/Contents

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் இனிது
# Good and Sweetness (Inidhu) in Thirukkural

**முனைவர் க. அன்பழகன்**, இணைப்பேராசிரியர், ஒருங்கிணைப்பாளர் மற்றும் தலைவர்
தமிழ்ப்பிரிவு -தொலைதூரக் கல்வி இயக்ககம்‘.அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர்.
**Dr. K. Anbalagan**, Associate Professor, Co-ordinator and Head, Tamil Wing – DDE, Annamalai University, Chidambaram
ORCiD: https://orcid.org/0000-0001-5156-5798
**DOI: 10.5281/zenodo.3930569**

## Abstract

*“Thirukkural” is well known across the globe for its morality and universality. Different perspectives of “Thirukkural” is constantly being the subject of research. In “Thirukkural”, multiple couplets across different chapters and sub-chapters tend to end with identical words like inidhu, peridhu, aridhu, perin etc. Although these end-words were identical, contextual meaning of the same word differs from each couplet. Among those words, here we like to discuss the differential usage and the corresponding contextual meaning of the word ‘inidhu’. As semantics is a non-redundant part of the modern lexicography, understanding the versatile use of word ‘inidhu’ in a classical Tamil literature like* Thirukkural *is inevitable. Although the concept of semantics may not be there during the period of “Thirukkural”, it is fascinating that “Thirukkural” provides opportunity and space to imply such modern research approaches. This paper uses this opportunity to explain the contextual meanings of the word inidhu with examples.*

**Keywords:** Good, Sweetness, Inidhu, *Thirukkural*

### அறிமுகம்

திருக்குறள் காலந்தோறும் பல்வேறு ஆய்வுகளுக்குகந்த மிகச் சிறந்த களமாக இலங்குகிறது. எத்தகையப் பரிமாணத்திலும் அதனை ஆராய்ந்து விளக்குதற்கு ஏற்ற கருத்துக்களை உள்ளடக்கியிருக்கிறது. வள்ளுவரின் சொல்லாளுமை ஒவ்வொரு குறளிலும் விதந்து காணப்படுகிறது. சொல்லின் வளமையும் வண்மையும் திருக்குறளைப் பலப்படுத்தும் பின்னணியாக உள்ளது. குறிப்பிட்ட சொற்களால் குறளை முடிப்பது என்கிற ஒரு முறைமை வள்ளுவரிடத்துக் காணப்படுகிறது. அவ்வகையில் இனிது என முடியும் திருக்குறள்களின் பொருண்மையியல் ஆய்வாக இக்கட்டுரை அமைகிறது.

### இனிது - சொற்பொருள்

இனிது எனும் சொல்லுக்குப் பொருள் அக நிலையில் புறநிலையில் பொருள் மாறுபாடுடையது. அகநிலை எனும்போதும் நன்று எனும் பொருளிலும் புறநிலையில் இனிப்பானது எனும்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

பொருள்நிலையில் கையாளப்படுகிறது. இது பயன்படுத்தும் சூழலைப் பொருத்து பொருள் மாறுபாடுடையதாக உள்ளது. இனிது என்பதற்குக் கழகத் தமிழ் அகராதி இன்பந்தருவது, நன்மையானது நன்றாக, இனிமையுடையது எனும் பொருள்களைத் தருகிறது. (ப.141 கழகத் தமிழ் அகராதி) கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி (ஆக.ஆன) மனத்துக்கு நிறைவு அல்லது மகிழ்ச்சி தருவது (இனிது ) என்றும் நிறைவாக, சிறப்பாக (இனிது ) என்றும் இருவகையில் பொருள்களைத் தருகிறது (ப.170 க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி) ஆக இனிது என்பது இன்பம், மகிழ்ச்சி, நிறைவு, நன்மை எனும் பொருள்களைக் கொண்ட ஒருபொருள் பலசொல்லாக உள்ளது. இச்சொல்லின் பொருள் குறித்த நிலைப்பாட்டைத் திருக்குறளில் கண்டறிந்து வெளிப்படுத்துவது இக்கட்டுரையாக அமைகிறது. பாரதி வசனக் கவிதையில் காற்று, நெருப்பு, வானம், பூமி, இயற்கை யாவும் இனிது (பாரதியார் கவிதைகள் ப.510) எனக் குறிப்பிடுவதைக் காணலாம்.

**திருக்குறளில் இனிது**

அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் எனும் முப்பிரிவுகளில் மொத்தம் பத்துக் குறள்கள் இனிது எனும் சொல்லுடன் முடிவடைகின்றன. காமத்துப்பாலில் 5 குறள்களும் பொருட்பாலில் 3 குறள்களும் அறத்துப்பாலில் 2 குறள்களுமாக அமைந்துள்ளன. இவற்றில் இனிது குறித்த கருத்துக்களை எண்ணிப் பார்க்கலாம்.

**இனிது எனும் சொல்லின் பொருண்மை**

திருக்குறளில் கையாளப்பட்டிருக்கும் இனிது எனும் சொல் பொதுவில் இனிமையானது. மகிழ்ச்சியைத் தரும் என்பதைக் கொண்டால் தொல்காப்பியர் எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்பதற்கிணையாக இனிது என்பதுற்கு இனிமையானது எனும் ஒருபொருளைக் கொண்டாலும் அது மேற்குறித்த திருக்குறளில் அறத்துப்பால், பொருட்பால் மற்றும் காமத்துப்பாலில் சூழலைப் பொருத்து பொருள் மாற்றம் நிகழ்கிறது. ஒரு சொல்லுக்கு ஒருபொருள் எனும் நிலையைத் தாண்டி அந்தப் பொருளைப் பயன்படுத்தும் பாடலின் சூழமைவில் அது பொருள் விரிவைப் பெறுகிறது. இதனால் இது இனிது. இப்படிச் செய்வதால் இது இனிது. இப்படிக் கிடைத்தால் இது இனிது என்னும் சூழலில் இனிது எனும் சொல் புற சூழலில் உடலுக்கு ஒரு சுகத்தைத் தந்து மகிழ்விக்கிறது. நாவிற்கு ஒரு சுவையைத் தந்து அது இனிக்கிறது. அதேபோன்று மனத்திற்கு ஒரு நிறைவைத் தந்து நலம் விளைவிக்கிறது என்பதை தான் குறள்களில் வரும் இனிது எனும் சொல் உணர்த்துகிறது.

இனிது எனும் சொல்லுக்கு நலம் விளைவிக்கும் பயனுடையது எனும் பொருளில் திருக்குறளில் பல்வேறு சூழல்களில் ஆளப்பட்டிருக்கிறது. இனிது எனும் சொல் மட்டுமின்றி ஒரு சொல்லுக்கு ஒருபொருள் கொண்ட எந்த சொல்லும் சூழலில் விரிவுபெற்று தொடர்புடைய பல்வேறு பொருள்களைப் பெறுகிறது என்பதையே இனிது எனும் சொல்லும் உறுதிச்செய்கிறது. மனித வாழ்வின் செயற்பாடுகளைச் சொற்கள் தீர்மானிக்கின்றன. அத்தகையவற்றுள் ஒரு சொல் இனிது என்பது. இது தேவையை, உணர்வை, அவசியத்தை, நல் நட்பை, இடர் தராமல் இருப்பதை, உதவி செய்வதை இனிது எனும் சொல்லுக்குள் அடக்குகின்றன. இதேபோன்று காமம் என்பது உடல்சார்ந்து அமைந்தாலும் அது உள்ளத்தின் நிறைவில்தான் நிறைவு கொள்கிறது. உள்ளத்தின் நிறைவு என்பது எண்ணுதல், நன்றாய் எண்ணுதல், எண்ணுமாறு செய்தல், எண்ணுமாறு நம்பிக்கையை ஊட்டல், அதனை உறுதிச்செய்தல் இவை யாவும் இனிது எனும் சொல்லுக்குள் அல்லது இனிது எனும் பொருட்புலத்தில் (semantic field)

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

அடங்குகின்றன. திருக்குறளில் இதுபோனறு பல சொற்களை வள்ளுவர் பொருள்விரிவாக்கச் செயற்பாடுகளுடன் பயன்படுத்தியுள்ளார் என்பதை மேலும் ஆய்ந்து உறுதிச்செய்யலாம். மேலும், இவ்வாறான திட்டமிடல் திருவள்ளுவர் காலத்தில் இல்லையென்பது உறுதியாகக் கூறினாலும் காலங்கடந்து இன்றைக்கான ஆய்வுச்சூழலுக்குமான பொருள் விரிவைத் தரும் சூழலில் திருக்குறளின் சிறப்பும் பெருமையும் திருவள்ளுவரின் படைப்பாளுமையும் புலனாகிறது. அரிது, பெரிது, பெறின் போன்ற சொற்களைக் கொண்டு முடியும் குறள்களும் இதுபோன்று இன்னபிறவும் இனிதான ஆய்வுக்குரியன.

**அறத்துப்பாலில் இனிது**

அறத்துப்பால் மற்றும் பொருட்பாலில் இனிது எனும் சொல் தாம் பெற்ற புதல்வர்கள் பெறும் அறிவினால் சமுகம் உயிர்க்கிறது அடுத்தவரைப் பற்றிப் புறங்கூறாமல் இருப்பதால் நல்லது எனும் நிலையில் இனிது பயன்படுத்தப்படுகிறது. இங்கே அறிவு, பண்பு நிலையில் இனிது பயன்படுத்தப் பட்டிருக்கிறது. ஒரு குடும்பத்தின் நிறைவு என்பது நல்ல புதல்வர்களைப் பெறுதல். மேலும் அவர்களை அறிவுடையவர்களாக்குதல். அதுவும் அந்த அறிவு சமூகத்திற்குப் பயன்தருவது. சமூகப்பயன்தரும் அறிவு என்பது கற்றவர்க்கும் அதைக் கைக்கொள்ளும் சமூகத்திற்கும் பயன்தருவது எனும் நிலையில் அது தேவையானது இடர் தராதது நலம் விளைவிப்பது ஆகவே இனிது என்னும் பொருளுக்குள் அது அடங்குகிறது. மனிதப் பண்புகளை வடிவமைப்பது நல்லது. அதிலும்புறங்கூறாமை என்பது நற்பண்பாகும். நல்ல பண்பை வடிவமைப்பது அவசியமானது. அது இனிதானது. புறங்கூறுதல் தீயனவற்றை விளைவிக்கும். தீயனவற்றை விளைவிக்காதது நல்லது அது இனிது எனும் பொருளுக்குள் அடங்குகிறது.

நட்பு என்பது உள்ளத்தில் ஒன்றி நிலைப்பது. நடிப்பது அல்ல. பொய்யற்ற நடத்தையே நல்ல நட்பின் அடையாளம். நல்ல நட்பிடம் எல்லாவற்றையும் பகிர்ந்துகொள்ளலாம். அது ஆபத்திற்கு உதவும். இடுக்கண் களைவதாம் நட்பு போல. துணையாக நிற்பது ஆபத்தின் சந்தர்பபங்களில். இத்தகைய இடர்களை நீக்கும் பண்புடைய நட்பு இனிது எனும் பொருளுக்குள் அடங்குகிறது.

**தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது (குறள் – 68)**

தம்முடைய மக்கள் அறிவுடைய மக்களாக அமைந்தால் தம்மைவிட இந்த உலகத்து உயிர்களுக்கு இனிதாகும். உலகத்து உயிர்களுக்கு இனிதாகும். நன்மையாகும். இக்குறளுக்கான பொருளில் பேரா.கு.வெ.பாலசுப்பிரமணியன் இன்பம் செய்வதாம்(இனிது எனும் சொல்லுக்கு) என்று குறிப்பிடுகிறார் (திருக்குறள் மெய்யுரை ப.21).

**அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்**
**புறங்கூறான் என்றல் இனிது (குறள் – 181)**

ஒருவன் அறத்தைச் செய்கிறேன் என்று கூறி செய்யாமல் விட்டு அடையும் பாவத்தைவிட பிறரைப் புறஞ்சொல்லாமல் இருப்பவன் என்பது உலகினர் கூறவது இனிதாகும். மேற்குறிப்பிட்ட இருகுறள்களிலும் இனிது என்பதற்குப் பின்வரும் பொருள்கள் கூறப்படுகின்றன. புறங்கூறாப் பண்பு மிகவும் நல்லதாகும் – நன்மையாகும். இக்குறளில் வரும் இனிது எனும் சொல்லுக்கு பேராகு.வெ.பாலசுப்பிரமணியன் அவர்கள் நல்லது எனும் பொருளில் பயன்படுத்துகிறார் (பிறரைப் புறம்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

பேசாதவன் என்று சொல்லுமாறு வாழ்தல் நல்லது (திருக்குறள் மெய்யுரை ப.44). ஜியுபோப் அவர்களின் மொழிபெயர்ப்பில் இக்குறளின் பொருள் பின்வருமாறு

**Their children's wisdom greater than their own confessed,**

**Through the wide world is sweet to every human breast"( p.21 The obtaining of Sons)**

**It is pleasant to all the powerful creatures of the great earth that their**

**Children should possess more knowledge than themselves" (p.15, The obtaining children)**

(திருக்குறள் நூற்பதிப்புக் கழகம் 1949 வெளியிட்டுள்ள நூல் திருக்குறள் மூலமும் ஆங்கில மொழிபெயர்ப்பும். இதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர் Rev. Drew & John Lazarus.)

மேற்குறிப்பிட்ட இரு ஆங்கில மொழிபெயர்ப்பிலும் Sweet (pope) pleasant (rev.drew) எனும் இருசொற்கள் இனிது என்பதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ள. இச்சொற்களுக்கான தமிழ்ப் பொருள்கள் Sweet – என்பதற்குப் பல பொருள்களைத் தந்தாலும் இனிய, இனிப்பான, அழகான , மகிழ்ச்சியூட்டுகிற, அன்புக்குரிய, விருப்புக்குரியதான எனும் பொருள்களைக் கருதிப் பார்க்கையில் (Engligh-English –Tamil Dictionary, University of Madras, p.1042) தம்முடைய பிள்ளைகள் அறிவுடையோர் என்று அறியும் பெற்றோர்க்கு மகிழ்ச்சியூட்டுகிற ஒன்றாக இருந்தாலும் அது இவ்வுலகத்தில் உள்ள மற்றவர்க்ளும் மகிழ்ச்சியூட்டுகிற, விருப்புக்குரியதாக மாறுவது என்பது இவ்வுலகத்திற்கு அவர்களின் அறிவால் கிடைக்கப்போகும் பயனை எதிர்பார்த்தே எனும் நிலையில் இங்கு இனிது என்பது நல்லது எனும் பொருக்குப் பொருந்தி வருகிறது.

Pleasant – மகிழ்வளிக்கிற, மனத்திற்குகந்த, உணர்ச்சிகளுக்கு இயைந்த, புலன்களுக்கு இணக்கமான எனும் பொருள்களைக் காணமுடிகிறது. (Engligh-English –Tamil Dictionary, University of Madras, p.746) தம்முடைய பிள்ளைகள் அறிவுடையோர் என்பது இவ்வுலகத்து உயிர்களுக்கு மகிழ்வளிக்கிற, மனத்திற்குகந்த, புலன்களுக்கு இணக்கமான என்பதன் வழியாகும் நிலையில் இவை இனிது என்பதற்குப் பொருளாகின்றன. மேற்கண்ட விளைவுகளை ஏற்படுத்துவது என்பது நல்லது என்பதுதான்.

புறங்கூறாப் பண்புடையவன் என்பது இனிது என்பதாகும். இக்குறளில் வரும் இனிது என்பதற்கு ஜி.யு.போப் …..there's ***good*** within him still (p.45 )எனும் சொல்லைப் பயன்படுத்துகிறார். இந்த குட் எனும் ஆங்கிலச்சொல்லுக்கு அகராதிப்பொருள் நல்லது, பயனுடையது, நன்மை, பொதுநலம் (சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலம்-ஆங்கிலம்-தமிழ் அகராதி, ப.445) எனத் தொடங்கிப் பல பொருள்களைg; பயன்படுத்தும் சூழலில் விரிவுபடுத்துகிறது.

மேற்குறிப்பிட்ட இரு குறள்களிலும் இனிது எனும் சொல்லுக்குப் பொருளாக நலம் பயப்பது, நன்மை தருவது, எனும் நிலையில் நல்லது எனும் சொல் அமைகிறது.

**பொருட்பாலில் இனிது**

பொருட்பாலில் செய்யும் செயல் தனித்துவம் மிக்கதாயும், எதிர்கால விளைவுகளை எதிர்கொள்ளும் திறனுடனும் நல்ல கேண்மையுடனான வாழ்வும் இனிது எனும் பொருளுக்குப் பகிரப்பட்டுள்ளது. இங்கே இனிது என்பது நல்ல வினையின் செயலின்பாற்பட்டு நலமானது எனும் பொருளுக்கு ஆகிநிற்கிறது.

**கான முயல்எய்த அம்பினில் யானை**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**பிழைத்தவேல் ஏந்தல் இனிது (குறள் – 772)**

வேட்டையில் கானகத்தில் ஒரு முயல் மேல் எய்தி வேலைவிடப் போர்க்களத்தில் ஒரு யானைமேல் எய்து இலக்குத் தவறிய வேலைக் கையில் ஏந்திப்பிடிப்பது இனிதானது.

**பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை**
**பெருகலின் குன்றல் இனிது (குறள் – 811)**

பார்ப்பதற்கு அன்புடையாரைப்போன்று பழகும் பண்பில்லாதவருடைய நட்பு என்பது பெருகுவதைவிடக் குன்றுவது இனிதானது.

**வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்**
**பண்பிலன் பற்றார்க் கினிது (குறள் – 865)**

ஒருவன் வினையாற்றுவதற்கு முன்னர் எதிர்காலத்தில் நடப்பதைப் பாராமல், அதனால் உண்டாகும் பயனைப் பற்றி எண்ணாமல், பயப்படாமல், பண்பும் இல்லாதவன் பகையானது பகைவர்க்கு இனிதாகும்.

மேற்கண்ட மூன்று குறள்களிலும் இனிது எனும் சொல் ஒப்பீட்டுத் தன்மையைப் பேசுகிறது. கானகத்தில் நிகழும் முயல் வேட்டையைவிடப் போர்க்களத்தில் யானையுடன் போரிடல் இனிது.

பாரதி சொன்னதுபோல பெரிதினும் பெரிது கேள் என்பதுபோல செய்யும் செயல் என்பது மிகஉயர்வானதாய் ஒப்பற்றதாய் அமைதல் வேண்டும். அது இனிதானது. முயலை வேட்டையாடினேன் என்பதைவிட யானையைக் கொல்ல நினைத்து எய்து தப்பிய வேல் இது என்பது பெருமைக்குரியது. பெருமைக்குரியது இனிதாகும். சொல்வதற்குப் பெருமையாகும். வீரம் என்பது சிறு முயலை வேட்டையாடுவது அல்ல போர்க்களத்தில் யானையை எதிர்ப்பது அவ்வாறு அது இயலாமல் போனாலும் அது வீரத்தின் அடையாளம். ஆகவே இது இனிதானது. ஜி.யு. போப்பின் மொழிபெயர்ப்பில் இக்குறள் பின்வருமாறு

**Who aims at elephant, though dart shoud fail, has greater praise**
**Than he who woodland hare with winged arrow slays. (p.163 Military Spirit)**

ரெவ். ட்ரூ ஜான் லாசரஸ் மொழிபெயர்ப்பில் இக்குறள் பின்வருமாறு

**It is more pleasant to hold the dart that has missed an elephant than that**
**Which has hit a deer in the forest (p.157 On Warrior)**

இம்மொழிபெயர்ப்பில் greater praise, pleasant எனும் இருசொற்கள் இனிது என்பதற்குப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. வேட்டை அல்லது போரிடல் எனும் சூழலில் காட்டில் முயலை வேட்டையாடி வென்றை வேலை பிடிப்பதைவிட என்பதைவிட போர்க்களத்தில் யானையுடன் போரிட்டு தவறும் வேலை பிடிப்பது மகிழ்ச்சியானது, பாராட்டிற்குரியது.

பேரா. கு.வெ.பாலசுப்பிரமணியன் இதற்கு உரை எழுதும்போது

**காட்டின் கண்ணே முயலைத் துரத்தி வீழ்த்திய அம்பை வெற்றி கொண்டது**
**என ஏந்துவதைவிடப் பரந்தவெளியில் யானையை எய்துவதில் வெற்றப**
**பெறாத வேலை ஏந்துவது பெருமைக்குரியது “ (படைச்செருக்கு பக்.78)**

ஜி.யு.போப்பின் greater praise எனும் சொல்லுக்கு இணையாகப் பெருமைக்குரியது எனும் சொல்லைக் கருதலாம். இனிது என்பதற்குப் பெருமைக்குரியது எனும் பொருளில் இக்குறளில் ஆளப்பட்டுள்ளது.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

உதட்டில் ஒன்றும் உள்ளத்தில் ஒன்றும் வைத்துப் பழகும் நட்பு பெருகுவதைவிடக் குறைவது இனிதானது. பண்பிலார் நட்பு தீ நட்பு. அது தீயைப் போலத் துன்பம் தரும். ஆகவே தீ பெருகுவதைவிடக் குறைவது இனிதானது. நலமானது. இக்குறளில் வரும் இனிது என்பதற்கு நல்லது எனும் பொருளைக் குறிப்பிடுகிறார் பேரா.கு.வெ.பா.(பக். 82 தீ நட்பு)

ஜி.யு.போப் இக்குறளுக்கு பின்வருமாறு பொருள் உரைக்கிறார்

**Though evil men should all-absorbing friendship show,**

**Their love had *better* die away than grow" (p.171 Evil Friendship)**

ரெவ். ட்ரூ ஜான் லாசரஸ் பின்வருமாறு பொருளுரைக்கிறார்.

**The decrease of friendship with those who look as if they**
**Would eat you up (through excess of love) while they are**

**Really destitute of goodness is far *better* than its increase" (p.165 on Evil Friendship)**

மேற்சுட்டிய இரண்டு ஆங்கில மொழிபெயர்ப்பாளர்களும் "Better" எனும் ஒரு சொல்லையே இனிது என்பதற்குப் பயன்படுத்தியுள்ளனர். Better எனும் சொல்லுக்கு மேம்பட்ட நலமுடைய எனும் பொருளைத் தருகிறது சென்னைப் பல்லைக்கழக அகராதி (பக்.86) ஆகவே நல்லது என்பதற்கிணையாகவே மேற்குறித்த ஆங்கிலசொல்லின் பொருளைக் கொள்ள இடமிருக்கிறது.

ஒரு வினையாற்றும் ஒருவன் அதனைச் செய்வதற்கு முன்னர் அதுகுறித்து விளைவன பற்றி யோசிக்கவேண்டும். பின்வருவன, பயன்தருவன, அஞ்சுவதற்குரியன, பண்புடையன என்பனக் குறித்து சிறிதும்யோசிக்காமல் செய்யும் செயல் இத்தகைய பண்புடையவனின் பகை என்பது இவன் பகைகொள்ளும் எதிரிக்கு இனிதாகும். எளிதில் வெல்லும் தன்மையைக் கொடுக்கும்.

பாவலரேறு பாலசுந்தரனாரும் பேரா.கு.வெ.பாலசுப்பிரமணியனும் இக்குறளில் வரும் இனிது எனும் சொல்லுக்கு எளிது எனும் பொருளைக் கையாளுகின்றனர். ஜி.யு.போப் இக்குறளுக்கு எழுதும் ஆங்கில உரை பின்வருமாறு

**No way of right he scans, no precepts bind, no crimes**

**Affright, No grace of good he owns; such man's his**

**Foe's delight." (p.181 The Might of Hatred)**

ரெவ்.ட்ரூ ஜான் லாசரஸ் மொழிபெயர்ப்பு பின்வருமாறு

**Pleasing (object) to his foe's is he who reads not moral works,**
**does nothing that is enjoined by them, cares not for reproach**

**And is not possessed of good qualities." (p.175 On the Characteristics of Enemies)**

இதில் delight, good எனும் சொற்கள் இனிது என்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதில் முதலாவது சொல் எளிது என்பதோடு சற்றுப் பொருந்திவருவதாகும்.

மேற்சுட்டிய குறள்களில் இனிது என்பது செய்யும் செயலின் சிறப்பிற்கு, பழகும் நல்ல நட்பிற்கு, சிந்தித்து ஆற்றும் வினைக்கு நலம் பயக்கும் என்னும் பொருளில் வருகிறது.

**காமத்துப்பாலில் இனிது**

காமத்துப்பாலில் புணர்தல் என்பது உடல்சார்ந்த மகிழ்ச்சியைத் முன்னிலைப்படுத்தியும் அதனைப் பெறுவதற்கு முன்னர் மனம் சார்ந்த மகிழ்ச்சியைத் தரவேண்டும்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

அப்போதுதான் அந்த உடல் சார்ந்த மகிழ்ச்சியை நிறைவாகப் பெறமுடியும் என்பதன் அடிப்படையில் இனிது என்பது மனம் சார்ந்த நிறைவிற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்**
**வெளிப்படுந் தோறும் இனிது (குறள் – 1145)**

மயங்குந்தோறும் கள்ளுண்டலை விரும்பினாற்போலக் காமமும் அலராகுந்தோறும் இனிதாகும்.

**ஒருதலையான் இன்னாது காமங்காப் போல**
**இருதலை யானும் இனிது (குறள் – 1196)**

காமம் ஒருதலையாய் இல்லாமல் இருவர் மனமொத்தும் அமையும்போதுதான் இனிதாகும்.

**உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்**
**கள்ளினும் காமம் இனிது (குறள் – 1201)**

உண்டால் மட்டுமே களிப்புத் தந்து உண்ணாமல இருந்தால் களிப்புத் தரவியலாத கள்ளைவிட நினைத்தாலே நீங்காத பெருங்களிப்புத் தருவது காமம் மட்டுமே.

**நனவினாற் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்**
**கண்ட பொழுதே இனிது (குறள் – 1215)**

நனவில் அனுபவிக்கும் இன்பம் இனிதானது. அதைவிடவும் இனிதானது கனவிலும் கண்டு அனுபவிப்பது.

**உணலினும் உண்ட தறலினிது காமம்**
**புணர்தலின் ஊடல் இனிது (குறள் – 1326)**

உண்ணும்போது அதற்கு முன் உண்ட உணவு செரித்துவிட்டது என்பதையுணரும் எத்தகைய இன்பமோ அதைப்போலப் புணர்வதற்கு முன்னர் உண்டாகும் ஊடல் இனிதாகும்.

மேற்சுட்டிய ஐந்து குறள்களும் காமம் பற்றிய கருத்துகளைத் தொகுத்துரைப்பது. கள் என்பது புறத்தளவில் இன்பத்தையும் அருந்தியபின்னர் மனத்தளவிலும் இன்பம் தருவது. ஆனால் இத்தகைய கள் உண்டால் மட்டுமே இத்தகைய களிப்பைத் தரமுடியும். ஆனால் காமம் நினைத்த மாத்திரத்திலேயே இன்பத்தை தரும். அது இனிதாகும். இங்கே மனத்திற்கு மகிழ்ச்சியையும் அதற்கான சூழலையும் உருவாக்குவது காமம். கண்டிப்பாக அனுபவிக்கப்போகிறோம் எனும் நம்பிக்கை மனத்திற்கும் உடலுக்கும் இனிதாக அமைகிறது.

மேற்குறிப்பிட்ட ஐந்து குறள்களிலும் வரும் இனிது எனும் சொல்லுக்கு ஜி.யு.போப் /ரெவ்.ட்ரூ ஜான் லாசரஸ் ஆகியோர் தரும் பொருள்கள் sweeter/delightful (1145), good/pleases (1196), sweeter/delight (1201), pleasant/pleasant (1215), sweet/delightful (1326) இப்பொருள்கள் புறச்சூழலில் இனிமை தருவன அதாவது உடல்சார்ந்த இன்பம் எனும் நிலையில் இனிமை தருவன என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளன. காமத்துப்பாலைப் பொருத்தளவில் முதலில் உடல்சார்ந்த உணர்வு தூண்டப்பட்டாலும் அது மனம் சார்ந்து நிறைவுறும் சூழலிலேயே உடல்சார்ந்து இனிதாகிறது என்பதுவே முழுமையான இனிது எனும் சொல்லுக்குப் பொருள்தரும் சூழலை உருவாக்குகிறது.

**முடிவுரை**

இனிது எனும் சொல்லுக்கான அடிப்படைப்பொருள் என்பது ஒன்றிருந்தாலும் இச்சொல்லைப் பயன்படுத்தும் பல்வேறு சூழல்களில் அது பொருள் விரிவிற்கு ஆட்படுகிறது. இறுதியில் தன்

**E-ISSN: 2581-7140**
**Vol. 3, Special Issue 1, July - 2020** **Available at: www.ijtlls.com**

பொருளைக் கொள்கிறது என்பதை அறிமுகம் செய்யும் ஒரு முயற்சியாக இக்கட்டுரையைக் கருதிப்பார்க்கலாம். மொழியியலில் பொருள் விரிவாக்கம் என்பது சொல்லின் பயன்பாட்டுச் சூழல்களைக் கொண்டது என்றாலும் ஒரு சொல்லுக்கு ஒருபொருள் தாண்டிப் பல்வேறு சூழமைவுப்பொருள்களும் பெருகுவது அந்தந்தப் படைப்பாளியின் படைப்பாளுமை பற்றியதாகும். இத்தகைய பொருள்விரிவாக்கம் மொழியின் சிறப்பிற்குப் பெருமை சேர்ப்பதாகும்.

**துணை நின்றவை**

[1] புலியூர்க் கேசிகன் (ப.ஆ.). “திருக்குறள்”, பரிமேலழகர் உரை, பூம்புகார் பதிப்பகம், சென்னை, எட்டாம் பதிப்பு, 2001.

[2] தி.பட்டுசாமி ஓதுவார் (ப.ஆ). “திருக்குறள் உரைக்கொத்து”, அறத்துப்பால், திருப்பனாந்தாள் மடம் வெளியீடு, 1960.

[3] தி.பட்டுசாமி ஓதுவார் (ப.ஆ). “திருக்குறள் உரைக்கொத்து”, பொருட்பால், திருப்பனந்தாள் மடம் வெளியீடு, 1960.

[4] தி.பட்டுசாமி ஓதுவார் (ப.ஆ). “திருக்குறள் உரைக்கொத்து”, காமத்துப்பால், திருப்பனந்தாள் மடம் வெளியீடு, 1961.

[5] பாவலரேறு ச. பாலசுந்தரம். “திருக்குறள் தெளிவுரை”, உலகத் திருக்குறள் பேரவை, தஞ்சாவூர், மூன்றாம் பதிப்பு, 2015.

[6] கு.வெ.பாலசுப்பிரமணியன். “திருக்குறள் மெய்யுரை”, உமாநூல் வெளியீட்டகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு, 2010.

[7] Rev.Dr G.U.Pope. “Thirukkural”, Uma Nuul Veliyeetakam, Thanjavur, August, 2005.

[8] Rev.Drew & John Lazarus. “The Teachers”, Publishing House, First edition, 1949.

[9] கழகப் புலவர் குழு. “கழகத் தமிழ் அகராதி”, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பத்தொன்பதாவது பதிப்பு, 2004.

[10] க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, விரிவாக்கித் திருத்திய புதிய பதிப்பு, சென்னை, மறுபதிப்பு, 2009.

[11] English – Tamil Dictionary, University of Madras, 1992.

[12] க.அன்பழகன், முனைவர். “சொல்லும் பொருளும்”, கேஜி பப்ளிகேஷன்ஸ், தஞ்சாவூர், 2002.

[13] “பாரதியார் கவிதைகள் மூலமும் தெளிவுரையும்”, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2019.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**அன்பழகன், க.** “திருக்குறளில் இனிது.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, இதழ் 1, ஜூலை 2020, பக். 1-9. டிஓஐ: 10.5281/zenodo.3930569.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Anbalagan, K.** “Good and Sweetness (Inidhu) in Thirukkural.” *International Journal of Tamil Language and Literary Studies,* vol. 3, no. 1, July 2020, pp. 1-9. DOI: 10.5281/zenodo.3930569.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# திருக்குறளும் மருத்துவமும்
# *Thirukkural* and Medicine

**முனைவர் க.கமலா,** தமிழ் இணைப்பேராசிரியர், வேல்ஸ் அறிவியல் தொழில் நுட்ப ஆராய்ச்சி நிறுவனம்,சென்னை.
**Dr.K.Kamala**, Associate Professor of Tamil, Vels Institute Of Science Techology & Advanced Studies, Chennai.
**ORCiD:** https://orcid.org/0000-0001-9357-8984
**DOI: 10.5281/zenodo.3930581**

## Abstract

*Many Tamil literatures were occurred during the Sangam period. It started and continued from Second Century to Fifth Century. They consisted of the noble thoughts for the people. In view of medical ideas, "Thirukkural" one of the Pathinenkeel Kannakku Noolgal attained a special attention for its noble ideas. Some medical names were used to write some poems including "Thirikadugam", "Elaathi", and "Sirupanjamoolam". Thiruvalluvar, the famous Tamil Poet had mentioned a few diseaseas and how to cure them. These were clearly mentioned in his famous couplets. "Thirukkural" says right food is right medicine. Untidy and neatness were obviously mentioned in the "Thirukkural". So that Thirukkural is well known diadactic treatise for common people. The aim of this article is that reader would know it better than others.*

**Keywords:** *Thirukkural*, Medicine, Valluvar, Medical Practice

### அறிமுகம்

உலகில் உயிர் தோன்றிய நாள் முதல் மனிதனும் விலங்கினமும் கால சூழ்நிலைகேற்ப பல்வேறு இயற்கை பேராழிவோடும், நோய்களோடும் போராட வேண்டி இருந்தது. பண்டைய மனிதன் நாகரீகம் வளர்ச்சி அடைவதற்கு முன்பு காடுகளிலும், மலைகளிலும் அலைந்து திரிந்து விலங்குகளை வேட்டையாடி வந்தான். இத்தகைய போராட்ட வாழ்வில் ஈடுபட்ட மனிதனுக்கு உடலில் காயங்களாலும், இயற்கை நோயாலும் துன்புற்றவன் இயற்கைச் சக்திகளை வழிபடுதல் மூலமும், பிணியைப் போக்குவதற்காகவும், இயற்கையாக கிடைத்த தாவர முலிகைகளை உட்கொண்டு ஆரோக்கியத்துடன் வாழ்ந்து வந்தான் என பல இலக்கியங்களில் மூலம் அறியமுடிகிறது .பலவேறு கலைகளை அறிந்த மனிதன் மருத்துவக் கலையையும்,நோயை நீக்குவதற்கான வழி முறைகளையும் அறிந்திருந்தனர் என்பதற்கு இன்று நமக்கு கிடைக்கும் அறநூல்களும், தமிழ் இலக்கியங்களும் சித்தர பாடல்களும் சான்றாக விளங்குகின்றன.

### கடைப்பிடிக்க வேண்டியத் தூய்மை

தூய்மை நம் இல்லத்திருந்தே தொடங்குகிறது. புறந்தூய்மை என்பது நாமும், நம்மைச் சுற்றியுள்ள பகுதியையும் எப்பொழுதும் தூய்மையாக வைத்திருப்பதை குறிக்கும். மனிதன் அன்றாட வாழ்வில் கடைபிடிக்கும் பழக்க வழக்கங்களில் ஒன்றான குளித்தல், துணிகளைத் துவைத்தல், பாத்திரம்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

கழுவுதல், வீட்டையும் வீட்டைச் சுற்றியுள்ள பகுதியையும் தூய்மையாக வைத்திருக்க வேண்டும் என்பதை, **"புறந்தூய்மை நீரான் அமையும்" (குறள் - 298)** என வள்ளுவர் பெருந்தகை கூறுகின்றார். இதனையே ஆசராக்கோவையும்,

**காட்டுக் களைத்து,கல்ம கழீஇ இல்லத்தை**

**ஆப்பிநீர் எங்கும் தெளித்து சிறுகாலை**

**நீர்ச்சால்,கரகம, நிறைய மலர் அணிந்து,**

**இல்லம்பொலிய, அடுப்பினுள் தீப்பெய்க (ஆசராக் கோவை – 46)**

என்னும் பாடலடியில் வைகறையில் எழுந்து வீடு,வாசலைப் பெருக்கிக் குப்பைகளைப் போக்கி வாசலில் நீரில் கரைத்த பசும் சாணத்தைத் தெளித்து சுத்தம் செய்யவேண்டும்.பின்பு பாத்திரங்களை கழுவி சமைக்கவேண்டும் என்று தூய்மையைப் பற்றி ஆசராக்கோவை கூறுகின்றது.

மற்றொரு குறளில்,

**கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்**

**குழாஅத்துப் பேதை புகழ் (குறள் – 840)**

இவ்வடிகளில் பெரும் செல்வந்தர்களால் நடத்தப்பட்டு வந்த அன்னதானக் கூடங்களில், தூய்மை மிக இன்றியமையாத்தாகக் கருதப்பட்டது. அதாவது அன்னதானக் கூடங்களுக்கு வரும் மக்கள் தங்கள் உடலையும் மற்றும் கைகால்களையும் தூய்மை செய்துகொண்டு வரிசையாக அமர்ந்து உண்பர். ஆகவே அன்னதானக் கூடத்திலும், உணவு பரிமாறும் இடத்திலும்,சுற்றுப்புறத்திலும் தூய்மையை கடைப்பிடிக்க வேண்டும் என்றும் அவ்வாறு இல்லையெனில் உணவுப் பொருட்கள் மட்டுமல்லாது மனிதனின் ஆரோக்கியமும் கெட்டுப்போகும்.மேலும் ஒருவன் பசி மிகுதியால் கைகால்களைக் கழுவாமல் அன்னதானக் கூடத்திற்குள் நுழைந்தால் அங்கே உணவு உண்போர் அனைவரும் மனம் அருவெறுப்புற்று உணவினை உண்ணாமல் எழுந்துவிடுவர். அதனால்தான் சான்றோர் "சுத்தம் சோறு போடும்" என்று கூறினார்கள். மேலும்,

**… வாய்**

**அடுயோடு நன்கு துடைத்து,வடிவு உடைத்தா**

**முக்கால் குடித்துக் துடைத்து முகத்துறுப்பு**

**ஒத்தவகையால் விரலுறுத்தி வாய்பூசல் (ஆசராக் கோவை – 27)**

என்ற பாட்டில் உணவை உண்டு வாய் கழுவும்போது வாயை நன்றாகத் தடைத்துக் கொள்ள வேண்டும். தண்ணீரை மூன்று முறை குடித்தல் வேண்டும்.முகத்தில் உள்ள கண்,வாய்,முக்கு போன்ற உறுப்புகளுக்கு ஏற்றவாறு வாயை நன்கு துடைத்துக் கொள்ள வேண்டும் அதாவது வாய், கண்கள்,மூக்கு கைவிரல்கள் தூய்மையாக இருந்தால் நோய் கடுகளவும் நம்மை அணுகாது என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். சீவக சிந்தாமணியில்,

**வாசநற் பொடியும் நீரும் காட்டிடக் கொண்டு வாய்ப்ப**

**புசுறுந் தங்மை நீரை மும்முறை குடித்து முக்கால்**

**காசறத் துடைத்து பின்னறத் கைவிரலுறுப்புத் தீட்டித்**

**தூசினா லங்கை நீவியிருந்தனன் தோற்ற மிக்கன் (சீவக- பதுமையார் இலம் 137)**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

தூய்மையின் முக்கியதுவத்தை ஆசிரியர் கூறுகிறார்.ஆகவே மனிதனின் உடலும்,உள்ளமும்,மற்றும் உணவும் அனைத்தும் தூய்மையாக இருந்தால் துன்பமில்லாமல் மகிழ்ச்சியுடனும்,ஆரோக்கியத்துடனும் வாழலாம்.

**உணவே மருந்தாக வேண்டும்**

உணவானது நோய்க்குரிய மருந்தாகப் பயன்படுகின்றது. அற இலக்கியங்கள் பெரும்பாலும் உணவே மருந்து என்ற கோட்பாட்டை வலியுறுத்திக் கூறியுள்ளன. மனிதன் உணவினைத் தேவைக்கு ஏற்பவும், அளவுக்கு ஏற்ப பயன்படுத்துவதில்லை. இதனால் தான் நோய்கள் ஏற்படுகின்றது.அவ்வாறு உண்டாலும் சத்தான உணவுகளை உண்பதில்லை.அதேபோல் தேவைக்கு குறைவான உணவுகளை உண்டாலும் நோய் ஏற்படுகின்றது. ஒவ்வொரு மனிதனும் எப்படி சாப்பிட வேண்டும் என்பதை,

**ஒருபோது யோகியே யொண்டளிர்க்கை மாதே**
**இருபோது யோகியே யென்ப – திரிபோது**
**ரோகியே நான்குபோ துண்பா துண்பா நுடல் விட்டுப்**
**யோகியே யென்று புகல் (நீதி வெண்பா – 9)**

என்ற பாடல் மூலம் ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவு மட்டும் உண்பவன் யோகி எனவும், இரண்டு வேளை உண்பவன் போகி, மூன்று வேளை உண்பவன் ரோகி (நோயாளி) எனவும், நான்கு வேளை உண்பவன் உடலைவிட்டு உயிர் விரைவில் விடும் போக்கி என்று குறிப்பிடுகிறது. ஆகவே ஒரு வேளை அல்லது இரண்டு வேளை உணவு உண்பது உடலுக்கு நன்மைப் பயக்கும். அளவுக்கு அதிகமான உணவு நோயை ஏற்படுத்தும் என ஆசிரியர் குறிப்பிடுகின்றார். இதனைத் திருவள்ளுவர்,

**ஆற்றல் அளவுஅறிந்து உண்க அஃதுடம்பு**
**பெற்றான் நெடிதுாய்க்கும் ஆறு (குறள் – 943)**

என்றும், பெரிதுண்ணின் நோயள வின்றிப் படும் (குறள் - 947) என்று கூறுகின்றார். இதில் உண்ட உணவு செரித்ததை அறிந்து, உண்ணபோகும் உணவை தேவையான அளவு உண்டு வந்தால் நீண்டகாலம் வாழலாம் என்கிறார்.வள்ளுவர், நாட்டுப்புற மக்களிடையே “நொருங்க தின்னால் நூறு வயது வரை வாழலாம்” என்ற பழமொழி வழக்கில் காணப்படுகிறது நொருங்க என்றால் உண்ணும் உணவை விரைவாக உண்ணாமல் பொறுமையாக மென்று உண்ண வேண்டும் அவ்வாறு தின்றால் நோயில்லாமல் நீண்ட ஆயுளோடும், ஆரோக்கியத்துடனும் வாழலாம் என்று இப்பழமொழி அறிவுறுத்துகிறது. ஆகவே உணவேமருந்தாக வேண்டுமே தவிர மருந்து உணவாகக் கூடாது என்பதை நாம் ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

உணவு உண்ணும் முறை

இன்றைய சமூகத்தில் நோய் இல்லாத மனிதகளே இல்லை எனலாம். நோய் வருவதற்கு ஆரோக்கியமற்ற, மற்றும் சுகாதரமற்ற உணவுகளே காரணமாகும். அந்த உணவுகளும் அளவுக்கு அதிகமாக உட்கொள்வதால் நோய்கள் ஏற்படுகின்றது. என்பதை,

**உண்டி வெய்யோர்க்கு உறுபிணி எளிது (முதுமொழி – 8 :7)**

பாடல் குறிப்பிடுகிறது. மற்றோரு பாடலான ஆசராக்கோவையில்

**உண்ணுாங்கால் நோக்கும் திசை கிழக்குக்கண் அமர்ந்து**
**தூங்கான்,துளங்காமை நன்குஇரீஇ, யாண்டும்**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**பிறிது யாதும் நோக்கான், உரையான், (ஆசராக் கோவை – 20 )**

உண்ணும் போது கிழக்கு திசை நோக்கி அமர்ந்து உண்ண வேண்டும், உண்ணும் போது தூங்கக் கூடாது என்பர் அதாவது சில பெற்றோர் இரவு நேரங்களில் சீக்கிரம் உறங்கும் தன் குழந்தையை எழுப்பி சோறு ஊட்டி விடுவார்கள்.அதனால் குழந்தைகளுக்கு அஜீராணக் கோளாறு ஏற்பட்டு உடல் நிலை பாதிப்படையும்.மேலும்,ஆடாமல்,அசையாமல், வேடிக்கைப் பார்க்காமல் உண்ண வேண்டும். வேடிக்கை பார்த்துக் கொண்டு உண்ணும் போது அளவுக்கு அதிகமாகச் சாப்பிட நேரிடும். பேசியும், சிரித்துக் கொண்டும் சாப்பிட்டால் உணவுப் பருக்கை மூச்சுக் குழாயுள் சென்று புரை ஏறும்,சில நேரங்களில் மரணம் ஏற்படும்.ஆகவே உண்ணும் போது கவனத்துடன் செயல் பட்டால் நோயின்றி வாழலாம் என்று ஆசிரியர் கூறுகின்றார்.

கூழும்,புற்கையும்,காடியும் உண்ட வறியவர்கள் வாழ்ந்த காலத்தில், அளவுக்கு மீறி உணவு உண்ட செல்வந்தர்களும் இருந்தமையை இலக்கியங்களின் வழியே அறிந்தாலும் “மருந்து” என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் அளவோடு உண்ண வேண்டும்,பசித்தப்பின் உண்ண வேண்டும் என்பதை,

**அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல**

**துய்க தவரம் பசித்து. (குறள் – 944)**

என வள்ளுவர். கூறுகிறார். **மீதூண் விரும்பேல் (ஆத்திசூடி -91)** நோயை உண்டாக்கும் அளவுக்கும் அதிகமான உணவினை உண்ண விருப்பபட வேண்டாம் என ஆத்திச்சூடியில் அவ்வை அறியுறுத்துகிறார். அதே போல் மற்றொரு பாடலில், **பாலோடாயினும் காலம் அறிந்து உண். (கொன்றை வேந்தன் – 60)** பால் கலந்த உணவென்றாலும் பசித்தப் பின் அருந்த வேண்டும். இதனையே சிறுபஞ்சமூலம், **காத்து உண்பான் காணான் பிணி (சிறுபஞ்சமூலம் 6: 3-4)** வேண்டாத உணவை விலக்கி உண்பவன் நோயில்லாதவனாக இருப்பான் என்று சிறுபஞ்சமூலம் கூறுகிறது. சுவையுணவு ஆக்கும் வகையறிந்தமை போலவே உடல் பயன்பெறும் உணவு உண்ணும் வகையினையும் மக்கள் அறிந்திருந்தனர். உடல் நிலைக்கு, மற்றும் காலநிலைக்கேற்ற உணவான கீரைகள்,பழங்கள், சிறுதானியங்கள் போன்ற உணவுகள் ஆரோக்கியத்திற்கு, வழிவகுக்கும். உடல் ஏற்றுக்கொள்ளாது உணவைக் கூட எவ்வாறு உண்ண வேண்டும் என்பதனை,

**மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்**

**ஊறுபா டில்லை உயிர்க்கு (குறள் -945 )**

உடலுக்கு ஒற்றுக்கொள்ளாத உணவுகளான துரித உணவுகள்,எண்ணெயில் பொரித்த உணவுகள், குளிர்பானங்கள், போன்றவை பொருத்தமில்லாத உணவுகளாகும். இம்மாதிரியான உணவினைத் தவிர்த்தால் நம் உடலுக்கும், உயிர்க்கும்,எந்த விதமான கேடு ஏற்படாது என்றும் மனதிற்கும் உடலுக்கும் மாறுபாடு இல்லாமல் விருப்பமான உணவாக இருந்தாலும் அளவுக்கு அதிகமாகாமல் மறுத்து அளவுடன் உண்டால் எவ்வித தொல்லையும் இல்லை உயிர்க்கு. இவ்வாறு வள்ளுவர் கூறுகின்றார். "பசித்தப்பின் புசி” என்பது சான்றோர் வாக்கு. பசித்த பின்பே உணவருந்த வேண்டும்.பசியாமல் உண்பது அஜீரணத்துக்கு வழி வகுக்கும்.அதனால் உடல் இயக்கம் தடைபடும் இது பல நோய்களை (வயிற்று வலி, வாயுக் கோளாறு,இன்னும் பிற) உருவாக்கும்.ஆகவே முன்வேளை

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

உண்ட உணவு செரித்தபின் அடுத்த வேளை உணவினை உண்பவனுக்கு மருந்தே வேண்டாம் என்பதை,

**மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**
**அற்றது போற்றி யுணின். (குறள் – 942 )**

தேவையற்ற உணவுகள் உடலுக்கு கேடு என்கிறார் .இது வள்ளுவரின் மிக அற்புதமான மருத்துவச் சிந்தனையாக இருக்கிறது

இதனை திருமூலர்,

**மறுப்ப துடல்நோய் மருந்தென லாகும்**
**மறுப்ப துள நோய் மருந்தெனச் சாலும்**
**மறுப்ப தினி நோய் வாரா திருக்க (திருமந்திரம், திருமூலர்-கனிச்சாறு.இணையதளம்)**

என உடலை வருத்தும் நோயை வராமல் செய்வதுதான் மருந்து என்கிறார்.மேலும் தியானப் பயிற்சியும், காட்சிப் பயிற்சியும், உடலைக் காக்கும் உற்ற நோயை அகற்றும் நீண்டநாள் வாழலாம் என்றும் நோயற்ற நிலையடையலாம் என்று திருமூலர் கூறுகிறார்.

**மருத்துவ முறை**

மருத்துவம் என்பது நோயை நீக்குவது அன்று நோய் தடுப்பதற்கும், வலுவூட்டல் முதலிய பிற தன்மைகளுக்கும் மருந்து பயன்படும் என்ற கருத்தாக்கமே வள்ளுவரின் கருத்தாக அமைகிறது.. நோய்களையும்,நோய் நீக்குதலையும் பற்றி மருந்து எனும் அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.வள்ளுவர் காலத்தில் மருத்துவ நூல்களும் அதைக் கற்ற வல்லுனர்களும் இருந்தனர் என்பதை அறிய முடிகிறது. ஒரு மனிதனுக்கு உணவு,உறக்கம்,தொழில் இவை மூன்றும் மிகுந்தாலும்,குறைந்தாலும் நோய் ஏற்படும்.மருத்துவர் என்பவர் நோயினையும்,அது வருவதற்கான காரணங்களையும் ஆராய்தல் வேண்டும் என்பதை,

**நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல் (குறள் 948)**

என்றும்,

**உற்றன் அளவும் பிணியளவும் காலமும்**
**கற்றான் கருதிச் செயல் (குறள் 949)**

என மருத்துவம் செய்யும் முறைகளை வள்ளுவர் கூறுகின்றார்.

**மருத்துவத்தின் நான்கு வகைகள்**

**உற்றவன் தீர்ப்பான் மருத்துழைச் செல்வானென்று**
**அப்பால்நாற் கூற்றே மருந்து (குறள் 950)**

பிணிக்கு மருந்து தருங்கால் நோயுற்றவன், நோய் தீர்ப்பான், மருந்து உழைச்செல்வான் என இவை நான்கும் மருந்துக்குரிய கூறுகளாகும்.இன்றைய காலக்கட்டத்தில் ஆங்கில மருத்துவத்தின் அடிப்படையில்தான் திருவள்ளுவரும் அவர் காலத்தில் உணர்ந்ததை குறளின் வழியே உணர்த்தியுள்ளார். வள்ளுவர் காலத்து மருத்துவரை "நூலோர்" எனவும், "கற்றான்"எனவும் குறிப்பிட்டுள்ளார். மேலும், மரங்கள் மருந்தாகப் பயன் பட்டமையினை "மருந்தாகித் தப்பா மரத்தற்றால்" (குறள் 217) என்னும் குறளின் மூலம் வள்ளுவர் காலத்தில் மருத்துவத் தொழில் நடைபெற்றமைத்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

தெரிகிறது. மனிதன் நோயுற்றவனாக இருப்பின் அவனைக் குணப்படுத்த "மருத்துவன்" தேவை அவன் "நோயைத் தீர்ப்பான்" என வள்ளுவர் கூறுகிறார். மேலும் நோய் தீர்க்க உதவும் அனைத்து வழிமுறைகளையும் உழைச்செல்வான் என்னும் சொல் மருத்துவருக்கு உதவியாய் நின்று செயல்படுவோனைக் குறிப்பிடுகிறார்.

**நோய்க்கான காரணம்**

உடலின் சீரான இயக்கத்தைத் தடைப்படுத்தி உடலை வருந்தச் செய்வதே நோயாகும் என்கிறார் தொல்காப்பியர். "பையுளும் சிறுமையும் நோயின் பொருளும்" (தொல்.பொ.34) என்னும் நூற்பாவில் மனவருத்தம் தருவது நோய் என்றும்,உடல் வருத்ததைத் தருவது பிணி என்றும் தொல்காப்பியர் கூறுகின்றார்.

இயற்கை மருத்துவம் பற்றி ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மருந்து என்னும் அதிகாரத்தை வகுத்துக் கூறியிருக்கும் வள்ளுவர். மனிதனுக்கு நோய் வராமல் தடுக்கவும், வந்த நோயைக் குணப்படுத்தவும் மருந்து பெரிதும் உதவுகிறது. "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பதற்கேற்ப நோயின்றி வாழ்வதற்கும், நோயை போக்குவதற்கும் உணவே உறுதுணையாக இருப்பதை இக்குறளின் வழியே ஆசிரியர் வெளிப்படுத்தியதைக் காணமுடிகிறது..

**மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலா எண்ணிய மூன்று (குறள் 941)**

வாதம் பித்தம், சிலேத்துமம் ஆகியவை முறையாக உடலில் இருக்கும் என்பதை அறிவோம். இவற்றில் இருக்க வேண்டிய அளவு குறைந்தாலும், அல்லது மிகுந்தாலும் நோய் உண்டாகும் இம்மூன்றும் அதிகமாவதற்கும், குறைவதற்கும் உண்ணும் உணவும் செயல்பாடுகளும் காரணம் என்ற வள்ளுவர் கூறுகின்றார்.

முதுமொழிக்காஞ்சியில் "உண்டி வேய்யோர்க்கு உறுபிணி எளிது" (முதுமொழி 8:7) எனும் பாடலடியில் அளவுக்கு அதிகமாக உணவினை உண்போருக்கு நோய் ஏற்படும் என்று குறிப்பிடுகிறது. மேலும், திரிகடுகத்தில் "உடம்பை உருக்கும் நோய் திருடரை விட அஞ்சத்தக்கது" (திரிகடுகம் 18) என்று கூறுகிறது.அதிகமான உணவுகள் உண்ணபது மட்டுமே நோயக்கு காரணமல்ல சமைத்த மீந்த உணவுகளை உண்பதாலும் நோய் ஏற்படுவதை,

**நுண்மை நுகரேல் (அவ்வையாரின் ஆத்திசூடி 70 )**
**நோய்க்கு இடங்கொடேல் (அவ்வையாரின் ஆத்திசூடி 76)**

நோயை உண்டாக்கும் நைந்த உணவுப் பண்டங்களை உண்ணக்கூடாது என்று கூறும்,அவ்வையே பழைய உணவினால் உடலுக்கும்,உயிர்க்கும் பாதிப்பை எற்படுத்தும் எந்த நோயும் உன்னை அணுக இடம் கொடுக்க வேண்டாம் என அறிவுறுத்துகிறார்.

**நோய் தடுப்பு முறை**

மனிதனுக்கு பிணி ஏற்படாமல் இருக்க தமது வாழ்க்கை முறையைச் சிறப்பாகச் செயல்படுத்தினால் துன்பம் தரும் நோயை தள்ளி வைக்க முடியும். மேலும் சிறப்புப் பயிற்சியின் மூலம் நோயைத் தடுக்க முடியும் என்பது இன்றைய மருத்துவ நிலையாகும்.இதனை வள்ளுவர்.

**வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும். ( குறள் 435 )**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

என நோய் வருமுன் காப்பதே சாலச் சிறந்தது. அவ்வாறு இல்லையெனில் அப்பிணி தீரும்வரை துன்பமே ஏற்படும் இத்துன்பமானது நோயில் பீடிக்கப்பட்டவர் மட்டும்மல்லாது அவரை சுற்றிவுள்ள அனைவரையும் பாதிப்பிற்குள்ளாக்கும். இக்காலச் சூழ்நிலைக்கேற்ப ஆசிரியர் அன்றே கூறியள்ளார்.

இதனை, முதுமொழிக்காஞ்சியில் "பிணி கிடந்தோன் பெற்ற இன்பம் நல்கூர்ந்தன்று" ( முதுமொழி 84 9:4). கடுமையான நோயால் வாடியவனின் இன்பம் மிகக் குறைவு என முதுமொழிக்காஞ்சி கூறுகிறது. திரிகடுகம் பாடலில்,

**உலகில் கடுகம் உடலின் நோய் மாற்றும்**

**அலகுஇல் அகநோய் அகற்றும் நிலைகொள்**

**திரிகடுகம் (திரிகடுகம் 101 சி.ப.1)**

உலக மக்களின் உடல் நோய்க்கு சிறந்த மருந்தான சுக்கு,மிளகு, திப்பிலி இவை மூன்று மருத்துவக் குணமுள்ளவை. இது மனிதர்களுக்கு வந்த நோயையும், வருகின்ற நோயையும் போக்கவல்லது. குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை உணவில் பயன்படுத்திப் பலன்பெறலாம்.

**காலையில் இஞ்சி கடும்பகலில் சுக்கு**

**மாலையில் கடுக்காய் மண்டலம் கொண்டால்**

**விருத்தனும் பாலனாமே (திருமந்திரம், திருமூலர்-பசுமைக்குடில் இணையதளம்)**

என்று இப்பாடலில் இஞ்சி, சுக்கு, கடுக்காய்,இம்மூன்று பொருட்களையும் தினசரி உணவாக சாப்பிட்டு வந்தால் எந்தவிதமான நோய்களும் நம்மை அணுகாது எனவும்,உடல் நலத்துடன் இன்பமாக வாழலாம் என்று திருமூலர் கூறுகிறார்.

**தொகுப்புரை**

திருக்குறள் அனைவருக்கும் பயன்படும் ஒரு வாழ்க்கைநெறி களஞ்சியம். வள்ளுவர் மக்களின் நாடித் துடிப்பை அறிந்த ஒரு மாமருத்துவர். மனிதர்கள் உள்ளிட்ட உயிரினங்களுக்கு அற இலக்கியங்கள் மூலம் இலக்கணம் வகுத்த வள்ளுவர் உடல்,உளநோயை நீக்கும் சித்தராவர்..உணவைக் கட்டுப்ப்படுத்துதலே உண்மையான நோய்க் கட்டுப்பாடு எனும் வள்ளுவரின் பார்வை உலகில் உன்னத மருத்துவப் பார்வை என்பது புலனாகிறது. இன்றையக் காலகட்டத்தில் மக்களுக்கு தூய்மை,மற்றும் உணவு, நோய் சார்ந்த பல்வேறு செய்திகளை பன்னூற்றாண்டுகளுக்கு முன்பே தன்னகத்தே கொண்டு விளங்கியுள்ளது.அதில் அற இலக்கியமான திருக்குறளில் இன்றைய சூழ்நிலைக்கு மனிதனுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும் வகையில் கருத்துகளை எடுத்துரைக்கிறது. இதன் மூலம் வள்ளுவரின் தனி மனிதனின் மீதுள்ள அக்கறை புலனாகிறது

**துணைநூற்பட்டியல்**

[1] திரு.தி.சு.பாலசுந்தரம். "ஆசராக்கோவை", சைவசித்தாந்தக் கழகம், சென்னை.

[2] திரு.தி.சு.பாலசுந்தரம். "சீவக சிந்தாமணி", சைவசித்தாந்தக் கழகம், சென்னை.

[3] த.ரெஜித்குமார். "நீதிவெண்பா", குமரித் தமிழ்ச்சங்கம், நாகர்கோவில்.

[4] அ. மாணிக்கம் எம்.ஏ. "சிறுபஞ்சமூலம்", மணிவாசகர் 31. சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை.

[5] திரு.தி.சு.பாலசுந்தரம். " திரிகடுகம்", சைவசித்தாந்தக் கழகம், சென்னை.

[6] திருமூலரின் திருமந்திரம், கனிச்சாறு, இணையதளம், பசுமைக்குடி இணையதளம்.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

[7] பதிப்பாசிரியர் மு. சண்முகம்பிள்ளை. "தொல்.பொருளதிகாரம்", பாரிமுனை, சென்னை.

[8] தே.ப. சின்னசாமி. "அவ்வையாரின் நீதிநூல்கள் மூலமும் தெளிவுரையும்", நாச்சியார் பதிப்பகம், சென்னை.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**கமலா, க.** "திருக்குறளும் மருத்துவமும்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, இதழ் 1, ஜூலை 2020, பக். 10-17. டிஒஐ: 10.5281/zenodo.3930581.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Kamala**, **K.** "*Thirukkural* and Medicine." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 3, no. 1, July 2020, pp. 10-17. DOI: 10.5281/zenodo.3930581.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# வள்ளுவரின் குறள்களில் மொழிக்கட்டமைப்பு
# Valluvar's Construction of Linguistic Structure

**ம.சுகுணா,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை, திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர் -632115.
**M.Suguna,** Ph.D, Research Scholar, Department Of Tamil, Thiruvalluvar University, Vellore-632115.
**ORCiD:** https://orcid.org/0000-0002-4706-6469
**DOI: 10.5281/zenodo.3930585**

## Abstract

*"Thirukkural" provides moral philosophy for human developments at various levels based on societal proprietary and individual disciplines. It precisely says about the ever green facts which are for all times, for any nations, for any religion, whose conspectus are all being accepected without any negotiations that is so called the unique and distinct features as "The Universal books". In general, a books is in the form of creativity are own concepts to establish in the world. It is based on its author's individual society place, depends on the author's religion and then additionally in the world view, but uniqueness of the "Thirukkural" reveals about the common and essential facts to all the people without having and special identification as mentioned above even though whose concepts and suggestions are generalized, words are selected from common ground and constructed only though not to belong any special identification but for similarities. This papers aim is to analyse the use of language and its commonness and suggestions in "Thirukkural".*

**Keywords:** "Thirukkural", Linguistic Structure, Lexical & Gramatical Homonymy

### முன்னுரை

உலகப் பொதுமறை அல்லது அறச்சிந்தனைகள் என்ற நிலையில் கருத்துக்கள் அமையும் விதமும் அக்கருத்துக்களைக் கட்டமைக்கும் மொழியும் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. மனிதனின் வாழ்வியல் அனுபவங்கள் பிறருக்குப் பாடமாக அமையும் வண்ணம் மொழிவழி விளக்குவதே அறநெறிக்கருத்துக்கள் ஆகும். இவை பாமர மக்களின் வழக்கில் பழமொழிகளாகவும், சொலவடைவுகளாகவும் அமைந்துள்ளன. பழமொழிகள் சொல்லடைகள் ஆகியவற்றின் பொருள், நீண்ட கதையின் நீதியாகவோ, மனித அனுபவங்களின் சுருக்கமாகவோ இருப்பதை உணரலாம். மனித வாழ்வனுபவங்களின் தொகுதிகளாகவே இப்பழமொழிகளும், சொலவடைகளும் ஒரு குறியீட்டுத் தன்மையுடன் மொழியில் கட்டமைக்கப்பட்டுள்ளன.

வள்ளுவரின் ஒவ்வொரு குறளும் அறம் சார்ந்த, தனிமனித ஒழுக்கம் சார்ந்த வாழ்வியல் கதைகளின் சாரமாக கருதப்படுகிறது. திருக்குறளின் முக்கியச் சிறப்பு அதன் கருத்தியல்களை மொழிப்படுத்தியப் பாங்காகும். கருத்துக்களை மொழிப்படுத்துவதும், மொழியை ஒரு வரம்புக்குள்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

கட்டமைப்பதும்தான் வள்ளுவரின் தனிச்சிறப்பாக அமைகிறது. வள்ளுவர் நான்கு வகை வெண்பாக்களில் மிகச்சிறியதாக அமைந்த குறள் வெண்பாவைப் பயன்படுத்தியுள்ளதை அறிய முடிகிறது. குறள் வெண்பாவானது ஏழு சீர்களை உடையது. ஏழு சீர்களுள் அறநெறிக்கருத்துக்களைப் பல்வேறு உத்திகளைப் பயன்படுத்தி வெளிப்படுத்தும் போது மொழி நிலையிலும் திருக்குறள் சிறந்து விளங்குகிறது.

**திருக்குறளின் சிறப்புகள்**

உலகப் பொதுமறைகளில் ஒன்றாக திருக்குறள் சிறந்து விளங்குகிறது. திருக்குறளின் பெருமைகளை அறியாதவர் இல்லை எனலாம். திருக்குறளின் பெருமைகளையும், திருவள்ளுவரின் பெருமைகளையும் விளக்கிச் சான்றோர்கள் பாடியப் பாக்களின் தொகுப்பே "திருவள்ளுவமாலை" ஆகும். இக்குறள் வெண்பாவைக் கண்டாலே குறளின் பெருமை விளங்கும்.

**அணுவைத் துளைத்தேழ்க் கடலைப் புகட்டிக்**
**குறுகத் தறித்தக் குறள். (திரு.மாலை- 55)**

என்று ஔவையாரும்,

**எல்லாப் பொருளும் இதன்பால்உள இதன்பால்**
**இல்லாத எப்பொருளும் இல்லையாம். (திரு.மாலை- 29)**

என்று மதுரைத் தமிழ்நாகனாரும், திருக்குறளைச் சிறப்பித்துப் பாடியுள்ளதை உணரலாம்.

பைந்தமிழ்க் குறளைப் பாங்குடன் பயின்ற பன்மொழிப் பாவலன் பாரதி, யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல், வள்ளுவனைப் போல், இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கனும் பிறந்ததில்லை என்றும், "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ்க் கொண்ட தமிழ்நாடு" அறிஞர்கள் கருத்தை அறியலாம்.

உலக இலக்கியங்கள் பல வகைகளில் உள்ளன. கதை சொல்பவை, கருத்துரைப்பவை, பாக்கள் உள்ளவை, பராபரமே பொருளென்று கொண்டவை என்ற வகையில் மாறுபட்டு திகழ்கிறது. ஆனால் சமூக மாற்றங்களில் சிறைபட்டு விடாமலும் காலங்கடந்து காலாவதியாகிப் போகாமலும் இருக்கும் ஒரே வாடாமலர், திருவள்ளுவர் அருளிய திருக்குறளாகும். ஆறறிவு கொண்ட மனிதனுக்கு நற்பண்பு என்னும் ஏழாம் அறிவையும் புகட்டி, என்றென்றும் வளம்மிக்க, வல்லமை பொருந்திய சமூகமாய் மாற்றவே எழுசீர்க் குறளே வள்ளுவரின் மொழிநடையை விளக்குகிறது.

**மொழிக்கட்டமைப்பு**

மொழியியல் அறிஞர்களின் பார்வையில் இன்றியமையாத ஒன்றாக கருதப்படுகிறது. மொழிக்கட்டமைப்பு என்பது மொழியின் அமைப்பாகும். அம்மொழியமைப்பைப் புரிந்து கொள்ள அதன் அடிப்படையை ஆராய்தல் வேண்டும். அடிப்படையானது பேச்சு உருவாக்கத்தில் தொடங்கி அவற்றிற்கு இலக்கிய இலக்கணங்கள் தோன்றுவது வரையிலான நிலைப்பாடாகும். அவற்றுள் இலக்கிய உருவாக்கம் மக்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும். மக்களது பழக்கவழக்கம், பண்பாடு சமூகம் மற்றும் சமூகச் சூழ்நிலைகளை எடுத்துரைக்க பயன்படுகிறது. ஒரு சிறந்த படைப்பின் வெற்றிக்கு மொழிக்கட்டமைப்புதான் காரணமாக அமைகிறது. படைப்பு என்பது சொற்களால் கட்டமைக்கப்படும் கலை. இலக்கிய வடிவம் எழுதுவோனுடைய மொழி, அம்மொழியின் கட்டமைப்பு ஆகியவற்றை அடித்தளமாகக் கொண்டுள்ளது. இதனைப் பின்வரும் பெடின் என்பவரது கருத்து விளக்குகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

”கட்டமைப்பு திருப்தியற்ற நிலையிலோ, ஏன் மோசமான நிலையில் இருக்கக் கூடிய சிறந்த இலக்கியப் படைப்புகளும் உள்ளன. ஆனால் மொழிநடை மோசமாய் இருக்கும் போது ஒரு படைப்பு சிறந்ததாய் இருக்க முடியாது. சிறந்த வீடு என்பது எப்போதும் மிக வசதியாக இருக்க வேண்டும் என்பதில்லை. அது கட்டுமானத் திட்டத்தைப் பற்றி அமையுமே அன்றி மரத்தின் தன்மையைப் பொறுத்து அல்ல. இருப்பினும் மோசமான மரத்தினைக் கொண்டு ஒரு நல்ல வீட்டினைக் கட்ட முடியாது. இது போன்றே மொழி நடை அதாவது மொழிக்கட்டமைப்பு அமையும்.” என்கிறார்.

இந்நிலையில் அறக்கருத்துக்களை ஏழு சீரில் பல்வேறு வெளியீட்டு உத்திகளால் மொழிப்படுத்தியதே வள்ளுவரின் சிறப்பாகிறது. அறக்கருத்துக்களை நான்கு சீர்களில் ஒரு சொல்லையே பயன்படுத்தி அதன் வழியாக கருத்தைக் கூற இயலுமென்ற செயல்பாட்டை வள்ளுவரின் குறள் வெளிப்படுத்துகிறது. இந்தக் கட்டுரை ஒரே சொல் நான்கு முறை பயின்று வரும் வண்ணம் அமைந்த குறள்களைத் தேர்வு செய்து அவை அமைக்கப்பட்டுள்ள விதத்தை மொழியியல் அடிப்படையில் ஆராய்கிறது.

**மொழி வரம்புகள்**

ஒருவன் தான் நினைக்கும் கருத்துக்களைப் பல்வேறு வகைகளில் வெளியிட முடிகிறது. எந்தவிதக் கட்டுப்பாடும் இன்றிப் பேச்சு வழக்கில் பொதுவான கருத்துக்களை வெளியிடும் பொழுது மொழியில் எந்தவிதச் சிக்கலும் எழாது. ஆனால் கருத்துக்கள் சிறப்பு நிலையில் அல்லது தொழில் முறையில் அமையும் பொழுது அத்துறையைச் சேர்ந்தவர்களாலேயே சரளமாக வெளியிட முடிகிறது. அதே தொழில் முறைக்கருத்துக்களை ஒரு குறிப்பிட்ட மொழி வரம்புக்குள் வெளிப்படுத்துவது என்பது துறை வல்லுநர்களுக்கு மட்டுமே சாத்தியமாகின்ற ஒன்றாக அமைகிறது. எனவே கருத்துக்களை மொழிப்படுத்தும் பொழுதும், குறிப்பாக மொழி வரையறைக்குள் வெளியிடும் பொழுதும் மொழி ஒரு தடையாக அமையலாம். மொழி வரம்புக்குள் வெளியிடப்படும் கருத்துக்கள் பாக்களாகின்றன. மொழி வரம்பிற்குள், சிறந்த வெளிப்பாட்டு உத்திகளால் வெளியிடப்படும் கருத்துக்கள் சிறந்த இலக்கியங்களாகின்றன.

குறள்கள்

**துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்**
**துப்பாய தூஉம் மழை. (குறள் - 12)**
**செயற்கரிய செய்வர் பெரியர் சிறியர்**
**செயற்கரிய செய்கலா தார். (குறள் -26)**

மேலே காட்டப் பெற்ற குறள்களின் நான்கு சீர்கள் ஒரே சொல்லால் அமைந்துள்ளது. இத்தகைய சொல் பயன்பாட்டால் கருத்துக் குழப்பமோ, பொருள் தெளிவின்மையோ இல்லாமல் ஏனையக் குறள்களைப் போன்றே இந்தக் குறள்களும் சிறந்து விளங்குகின்றன. குறள்களின் கட்டமைப்பை ஆராயும் பொழுது தான் வள்ளுவரின் மொழிப் பயன்பாட்டுத் திறனைப் புரிந்து கொள்ள முடிகிறது.

**சொல் கட்டமைப்பு**

மொழியியல் நோக்கில் இக்குறள்களின் சிறப்பைச் சொல் கட்டமைப்பு, கருத்துக் கட்டமைப்பு என்ற இரண்டு நிலைகளில் விளக்கலாம். சொல்கட்மைப்பு என்பது சொற்களின் தன்மையை அறிந்து பயன்படுத்தும் முறையும், சொற்களை உருவாக்கும் திறனும் அடங்கியதாகும். எடுத்துக்கொண்ட

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

குறள்களில் பெரும்பாலும் ஒரு சொல்லோ, சொல் வடிவமோ நான்கு சீர்களில் வருவதை அறிய முடிகிறது. சொல் ஒன்றே என்று நாம் எடுத்துக்கொண்டாலும் அச்சொற்கள் ஒரே சொற்கள் அல்ல என்பது சற்று ஆழ்ந்து நோக்கும் பொழுது புலப்படுகிறது. ஒரு சில குறள்களில் குறிப்பாக

**செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை. (குறள் - 411)**

என்பன போன்றவற்றில் 'செல்வம்' என்பதை ஒரே சொல்லாகக் கொண்டாலும், வேறு சில குறள்களில் எடுத்தாளப்பட்டுள்ள சொல் வடிவ நிலையில் ஒன்றாக இருப்பினும், அதன் பொருளிலும், இலக்கணத் தன்மையிலும் வேறுபட்டிருக்கும். இதை உருவொப்புமை (Homonymy) என்று கூறுவர். "ஒரு சொல் ஒன்றுக்கு மேற்பட்ட தொடர்புடையப் பொருட்களை உடையது என்ற நிலையிலிருந்து வேறுபட்டு இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட சொற்கள் வரிவடிவத்திலோ, ஒலிப்பு நிலையிலோ ஒத்திருப்பது உருவொப்புமை எனப்படும்" என்று மாதையன் குறிப்பிடுகிறார். (பெ.மாதையன், அகராதியியல்.ப.எண்; 198) இவ்வுருவொப்புமை அல்லது ஒப்புருச் சொற்களை மொழியியலில் மூன்று வகைகளாகப் பிரிக்கப்படுகிறது. அவை,

- சொற்பொருள் ஒப்புருச் சொற்கள் (Lexical Homonymy)
- இலக்கண ஒப்புருச் சொற்கள் (Grammatical Homonymy)
- சொற்பொருள் இலக்கண ஒப்புருச் சொற்கள் (Lexical Grammatical Homonymy)

**சொற்பொருள் ஒப்புருச்சொல்**

ஒத்த வடிவுடைய ஒரு சொல், இலக்கணப் பொருளில் ஒன்றாகவும், சொற்பொருளில் வேறுபட்டும் அமைவது சொற்பொருள் ஒப்புருச் சொல்லாகும். இந்த அடிப்படையில் பார்க்கும் பொழுது வள்ளுவர் திருக்குறளில் ஒரே சொல்லைப் பயன்படுத்தவில்லை என்பதும் ஒப்புருச் சொற்களைத்தான் பயன்படுத்தியுள்ளார் என்பதை அறியலாம். ஒப்புருச் சொற்களிலும் பல்வேறு வகையான சொற்களைப் பயன்படுத்தியதை எடுத்துக்காட்டுகள் மூலம் உணரலாம்.

**இன்மையின் இன்னாதது யாதுஎனின் இன்மையின்**
**இன்மையே இன்னா தது. (குறள் -1041)**
**வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றுஅது**
**வேண்டாமை வேண்ட வரும். (குறள் - 362)**

இக்குறள்களில் "இன்மை" என்ற சொல் சொற்பொருளில் வறுமை, முயற்சியின்மை என்று சொற்பொருள் வேறுபட்டுள்ளது. இலக்கணப் பொருளில் பெயர் என்ற நிலையில் உள்ளது. இவ்வாறு ஒரே இலக்கணப் பொருளுடைய ஒத்த வடிவங்களுடைய சொற்களைச் சொற்பொருளின் வேறுபாடுகளை வைத்து இக்குறள்கள் கட்டமைக்கப்பட்டுள்ளன. வேண்டுதல், வேண்ட என்ற சொற்களும் இலக்கண நிலையில் வினை வடிவமாக இருப்பினும் பொருள் நிலையில் மாற்றம் உள்ளதைக் காணமுடிகிறது.

**இலக்கண ஒப்புருச்சொல்**

இலக்கண ஒப்புருச்சொல் என்பது இலக்கணப் பொருள் நிலையில் வேறுபட்டும்,சொற்பொருள் நிலையில் தொடர்புடைய பொருண்மைகளைக் கொண்டும் அமைவதாகும். இத்தகைய ஒப்புருச் சொற்கள் கையாளப்பட்ட விதத்தை பின்வரும் குறள்கள் மூலம் உணரலாம்.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**சொல்லுக சொல்லின் பயனுடைய சொல்லற்க**
**சொல்லின் பயனிலாச் சொல். (குறள் - 200)**
**ஒற்றுஒற்றித் தந்த பொருளையும் மற்றும்ஓர்**
**ஒற்றினால் ஒற்றிக் கொளல். (குறள் -588)**

மேற்காட்டிய குறள்களில் சொற்பொருள் ஒன்றாக இருப்பினும் இலக்கணப் பொருள்கள் வேறுபட்டுள்ளன. இக்குறள்களில் சொல், ஒற்று ஆகியவை பெயராகவும், வினையாகவும் வந்துள்ளன. ஆனால் அவற்றின் சொற்பொருள்கள் தொடர்புடையனவாய் இருக்கின்றன. சொல்லின் வினைவடிவங்கள் செயலாகவும், பெயர் வடிவங்கள் எழுவாய், செயப்படுபொருளாகவும் அமைவதால் கூறவந்த கருத்துக்கள் சிறப்புப் பெறுகின்றன.

**சொற்பொருள் இலக்கண ஒப்புருச்சொல்**

இலக்கணப் பொருள், சொற்பொருள் எனும் இரண்டிலும் வேறுபட்டு வரும் ஒப்புருச் சொற்கள் உள்ளன. அவை சொற்பொருள் இலக்கண ஒப்புருச் சொற்கள் எனப்படும். இத்தகையச் சொற்களையும் வள்ளுவர் குறள்களில் பயன்படுத்தியிருப்பது அவரின் சொல் திறனுக்குச் சான்றாக அமைகிறது.

**குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ**
**குன்றி அனைய செயின். (குறள் - 965)**
**பற்றுக பற்றுஅற்றான் பற்றினை அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு. (குறள் - 350)**

குன்று, என்ற சொல் பெயர், வினை என்ற இலக்கண நிலையிலும் மலை, நாணுதல் என்ற சொற்பொருளிலும் வேறுபட்டு வருமாறு ஒப்புருச்சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. பற்று என்பது பெயர், வினை என்ற நிலையிலும், ஆசை, பிடி என்ற பொருளிலும் வந்துள்ளது. இவ்வாறு ஒரே சொல்லின் பல்வேறு தன்மைகளை வைத்துக் குறள் கட்டமைக்கும் பொழுது, புறநிலையில் சொல் போலத் தோன்றினாலும், அகநிலையில் ஆழ்ந்த பொருட்சிறப்பு உடையனவாக அமைந்துள்ளன.

**முடிவுரை**

திருக்குறளின் மொழிக்கட்டமைப்புசிறப்பிற்கும், கருத்துக்கட்டமைப்பிற்கும் சான்றாக அமைவது ஒப்புருச்சொற்கள் ஆகும். இலக்கியக் கருத்துக்கள் அதிக கற்பனையும், உணர்ச்சியும் கலந்து அமைகிறது. ஆனால் கற்பனையும் உணர்ச்சியும் இல்லாமல் அறிவியல் அடிப்படையில் மொழியை அமைத்து சிறந்த இலக்கியமாகத் திகழ்வது திருக்குறளாகும். வள்ளுவரின் மொழித்திறமைக்கு இவ்வொப்புருச் சொல் குறள்களே சான்றாக அமைகிறது. திருக்குறளில் மொழிவரம்புகள், சொல் கட்டமைப்பு, மொழிக்கட்டமைப்பு, ஒப்புருச்சொற்கள், அதன் சிறப்புகள் என பல்வேறு கூறுகளை உள்ளடக்கியதாக உள்ளது வள்ளுவரின் திருக்குறளாகும் என்பதை அறிய முடிகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**துணைநூற்பட்டியல்**

[1] இராமமூர்த்தி எல். "தமிழ் இலக்கியங்கள் கட்டவிழ்ப்பும் கட்டமைப்பும்", காவ்யா பதிப்பகம், சென்னை, 2005.

[2] கான்ஸ்டான்டின் ஃபெடின், "கலையும் மொழியும் (மொழிப்பெயர்ப்பு)", விடியல் பதிப்பகம், கோயம்பத்தூர், 2010.

[3] நடராசன் தி.சு. "திறனாய்வுகு கலை", நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1996.

[4] பரிமேலழகர் உரை (கருத்துடன்). "திருக்குறள்", பாரதி பதிப்பகம், சென்னை, 1992.

[5] வேதநாயகம் இராம. "திருவள்ளுவமாலை", மணிமேகலை பிரசுரம், சென்னை.

[6] மாதையன் பெ. "அகராதியியல்", தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1997.

[7] முருகரத்னம்.தி. "வள்ளுவர் வகுத்த பொருளியல் கருத்தரங்க கட்டுரைகள்", மதுரைப் பல்கலைக்கழகம், 1975.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**சுகுணா, ம.** "வள்ளுவரின் குறள்களில் மொழிக்கட்டமைப்பு." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, இதழ் 1, ஜீலை 2020, பக். 18-23. டிஓஐ: 10.5281/zenodo.3930585.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Suguna, M.** "Valluvar's Construction of Linguistic Structure." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 3, no. 1, July 2020, pp. 18-23. DOI: 10.5281/zenodo.3930585.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் பேச்சுக்கலையின் கூறுகள்
# Oration Skills in *Thirukkural*

**முனைவர் வெ.சிவசங்கர்**, இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை, வேல்ஸ் பல்கலைக்கழகம், சென்னை -117
**Dr.V.Sivasankar**, Associate Professor, Department of Tamil Vels University, Chennai -117
ORCiD: https://orcid.org/0000-0002-4313-0644
**DOI: 10.5281/zenodo.3930594**

## Abstract

*Speech serves as an instrument to man to convey his thoughts. It is a great opportunity that humanity is blessed with. The art of speech is to make others follow what an individual has in mind .We can learn of nuances of speech and exchange of ideas from a vast body of literature. Learning such intricacies of speech in "Tirukkural" after the stance of Tiruvalluvar is the purpose of this paper. Apart from the varied states of speech, its nature and specialities, the significance of the art of speech is also vividly vivified. "Tirukkural" which is considered the sacred text of world literature deals with the myriad nature of speech. The first chapter that deals with the nature of speech is titled "Iniyavai Kooral" (The Utterance of Pleasant Words). In the ten couplets, the poet explains the sweetness of pleasant words on being uttered. Bringing out the skills of oration and good speech is the idea of this paper.*

**Keywords:** Oration Skills, *Thirukkural*

**அறிமுகம்**

மனிதன் தன் எண்ணத்தை வெளிப்படுத்தும் கருவியாகப் பேச்சுப் பயன்படுகிறது.பேச்சு என்பது மனித இனத்திற்குக் கிடைத்த மாபெரும் வாய்ப்பாகும். மனிதன் தான் வெளிப்படுத்திய உணர்வுகளை மற்றவர்களைப் பின்பற்றச் செய்யவும் உதவுவதே பேச்சுக்கலை ஆகும்.பேச்சுக்கலை எப்பொழுது தோன்றியது என்று அறுதியிட்டுக் கூறிட இயலாது. எனினும் சக மனிதர்கள், ஒருவொருக்கொருவர் பேசிக்கொள்ளும் மொழி எப்பொழுது தோன்றியதோ,அப்பொழுதே பேச்சாற்றல் என்னும் கலையும் தோன்றிவிட்டது எனலாம் பேச்சுக்கலை பேராற்றல் வாய்ந்தது. அது முத்தொழில் புரியும் வல்லமையும் வாய்ந்தது. பேச்சைக் கலையாக்குவது அறிவுடைமை (ஆவராணி ஆனந்தன், மேன்மை தரும் மேடைப்பேச்சு, ப.15.) என்ற திரு.வி.க வின் கூற்றின் அடிப்படையில் நோக்கும் போது பேச்சு என்பது உரையாடல் தவிர்த்த, உயர்ந்த நோக்கோடு கூடிய ஒர் அரிய கலையாக காலங்காலமாகத் திகழ்ந்து வருகிறது.இலக்கியங்களிலும் பேச்சு, சொல் குறித்தான கருத்தாடல்கள் இடம் பெறுவதலையும் அறியமுடியும்.அத்தகைய பேச்சுக்கலையின் கூறுகள் திருக்குறளில் இடம் பெறுவதை வள்ளுவத்தின் வழி நின்று அறிதலே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

**பேச்சின் அடிப்படை**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

பேச்சாளனுக்கு தைரியத்தையும் மனவுறுதியையும் தருவது எதுவெனில், பேசப் போகின்ற தலைப்பை, பொருளைப் பற்றிய ஆழமான அறிவுதான் இவ்வாழமான அறிவுக்குத் தேவை,தொடர் படிப்பும் பேச்சுக்கான தயாரிப்புமே (கு.ஞானசம்பந்தன் பேசும் கலைப 28) என்கிறார் ஞானசம்பந்தன். இக்கருத்தினை வள்ளுவம் பேச்சாளனின் அடிப்படை தகுதியாய் கூறுகிறது.

**அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய**

**நூலின்றிக் கோட்டிக் கொளல். (குறள் 401)**

நிரம்பிய நூலறிவு இல்லாமல், படித்தவர்கள் சபையிலே சென்று ஒழுங்கின்றி பேசுவதானது,அரங்கு இழைக்காமல் வாட்டாடுகிறதுபோல நகைப்புக்கே இடமாகும் என்று திருக்குறள் கருத்துரைக்கிறது எனலாம்.

பேச்சையே வள்ளுவர் ஒரு அறம் என்பதாகக் கொள்கிறார். திருக்குறளில் நான்காவது அதிகாரம் அறன் வலியுறுத்தல் அதில் ஒரு குறள்

**அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**

**இழுக்கா இயன்றது அறம் (குறள் 35)**

இதில் இன்னாச்சொல் என்னும் கடுஞ்சொல்லை விட்டு நீங்குவதே அறம் என்று வள்ளுவர் தெளிவுப்படக் கூறியுள்ளார். பரந்த மனமும் , விரிந்த வாசிப்பும் நல்ல பேச்சாளனுக்கு உரிய அடிப்படைத் தகுதி எனலாம்.

**வள்ளுவத்தில் பேச்சின் கூறுகள்**

உலகப் பொதுமறை என்றழைக்கப்படும் திருக்குறளில் ''பேச்சு'' குறித்த பல கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன.நேரடியாகப் பேச்சின் இயல்பு என்பது குறித்து வள்ளுவர் கூறும் முதல் அதிகாரம் இனியவை கூறல். இதில் பத்து குறட்பாக்களிலும் இன்சொல்லின் இனிய இயல்புகளை அழகாய்க் கூறுகிறார். இதில் அகம் மகிழ்ந்து ஈதலைக் காட்டிலும் முகம் மலர்ந்து இன்சொல் கூறுவது சிறப்பு என்பதை

**அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து**

**இன்சொலன் ஆகப் பெறின் (குறள் 92)**

என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார்.அது போல இனிமையும் பயனும் தரக்கூடிய நல்ல சொற்கள் இருக்க பயனற்ற சொற்களை பயன்படுத்தலாமா(குறள்100) என்றும்

**அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை**

**நாடி இனிய சொலின் (குறள் 96)**

எங்கும் நல்லவைகளையே விரும்பி , எவரிடமும் இனிமையாகப் பேசுவதையும் மேற்கொண்டால், உலகிலே கெடுதல்கள் மறைந்து, தர்மமும் பெருகும் என்று பேச்சுக்கலையில் இனியவை கூறுவதை ஒரு அறமாகவே கடைபிடிக்க வேண்டும் என்று வள்ளுவம் கூறுகிறது. பேசும் போது கடைப்பிடிக்க வேண்டிய நல்ல நெறியாக 'புறங்கூறாமை'யைக் குறிப்பிடும் வள்ளுவர்,பேச்சில் அறத்தைக் கடைபிடித்தலை விட புறங்கூறுதலை தவிர்த்தலே அறமாகும் என்கிறார்.

**நாவடக்கம், வாய்மை**

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம் இவை ஒருவரிடம் அமைந்துவிட்டால் வாய்மை வெகு இயல்பாக அவருள் சிறப்பெய்தும் என்பதனை உணர்த்தவே வள்ளுவர் அதனை இறுதியுள்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

வைத்துள்ளார் (ச.சிவகாமி, தமிழர் வாழ்வியல், ப.20) எனலாம் இவற்றுள் வாய்மை தனித்துச் சிறப்பிக்கத்தக்க பெருமையுடையது இதனை வள்ளுவர்

**வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**

**தீமை இலாத சொலல் (குறள் 291)**

இதில் கேட்பவருக்கு எள்ளளவும் தீமை தராத பேச்சே வாய்மை என்பது வள்ளுவரின் அழியா நம்பிக்கை எனலாம். திருக்குறளில் ''அடக்கமுடைமை'' என்னும் அதிகாரத்தில் அடக்கத்தின் சிறப்புக்களைக் குறிப்பிடும் வள்ளுவர், அடக்கம் என்பதில் ''நாவடக்கம்'' என்பதையும் சேர்க்கிறார்.நாநலம் என்பது தனிச்சிறப்பினை உடையது ஆகையினால் மற்ற எல்லா நலன்களிலும் அடங்குவது ஆகும்.

**யாகாவார் ஆயினும் நாகாக்க காவாக்கால்**

**சோகாப்பர் சொல் இழுக்குப் பட்டு (குறள் 127)**

என்ற குறளில் நாவடக்கத்தின் முக்கியத்துவத்தை மிகவும் வலியுத்தியுள்ளார் எனலாம்.எச்சூழ்நிலையில் நம் நாவிலிருந்து சொல் வந்தாலும் நல்லதாக இருக்க வேண்டும்.கேட்பவர் மனதில் எந்த மாதிரியான தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்பதைக் காண வேண்டும்.

**பயனில சொல்லாமை**

பயனில்லாத வீண் சொற்களைச் சொல்லாதிருத்தலின் முக்கியத்துவத்தை வலியுறுத்த ''பயனில சொல்லாமை'' என்னும் அதிகாரத்தை வள்ளுவர் அமைத்துள்ளார் ஒரு மருத்துவரிடம் இருந்து வரும் சொல் நோயாளிக்கு நம்பிக்கையைத் தருமானால் மருந்தரி அமையும்.ஆசிரியர் கூறும் சொல் மாணவனை மேன்மையுறச் செய்யும். ஒரு தலைவன் சொல்லும் சொல் அவன் சார்ந்த குழுவில் ஒற்றுமையை வளர்க்கும்.அன்னையின் சொல் அன்பைப் பெருக்கும்.தந்தை நவில்தல் ஒழுக்கத்தைக் கொடுத்து வளர்க்கும்.அரசன் பகர்வது மக்களை நல்வழிப்படுத்தும். எனவே எந்த ஒரு தனிமனிதனும் குடும்பத்திலும், சமூகத்திலும் நல்ல சொற்களைப் பேசிப் பழகுதல் வேண்டும் , இதைத்தான் வள்ளுவர்,

**சொல்லுக சொல்லில் பயனுடைய சொல்லற்க**

**சொல்லில் பயனிலாச் சொல் (குறள் 645)**

என்கிறார்.பேசும்போது பயனுடைய நல்ல சொற்களைப் பேச வேண்டும். பயனற்ற வீண் சொற்களை ஒருபோதும் பேச வேண்டாம் என்பது வள்ளுவர் கருத்து .

**பயனிலசொல் பாராட்டு வானை மகன்எனல்**

**மக்கட் பதடி எனல். (குறள் 196)**

இதில் பயனில்லாத சொற்களைக் கூறுபவன் 'மனிதன்' அல்ல, அவன் மக்களில் 'பதர்' என்று மிகவும் கடுமையாகச் சாடியுள்ளார்.

**அவையறிதல்**

கேட்போன் களனே காலம் (நன்னூல் நூ.எண்:47) சிறந்த பேச்சை ஒரு பேச்சாளர் பேசுகிறாரென்றால் அது பேச்சாளனின் திறமை மட்டுமல்ல அமர்ந்து கேட்கின்ற சபையில் உள்ள கேட்போரின் ஆர்வமும் ஒரு காரணமாகும்.எனவே சிறந்த பேச்சாளர் வேண்டும் எனச் சபையோரும் நல்ல சபை கிடைக்க வேண்டுமென்று பேச்சாளனும் விரும்புவது இயற்கை (கு.ஞானசம்பந்தன், பேசும் கலை, ப; 76) என்கிறார்.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

நண்பர்களுடனும் மற்றவர்களுடனும் பேசுவது எளிது.அவைமுன் நின்று அஞ்சாமல் பேசுவது ஓர் அரிய செயலாகும்.போர்க்களத்தில் புகுந்து அந்ஞ்சாது போரிட்டு வென்று வருபவர் பலராவர். ஆனால் அவையிடைப் புகுந்து அஞ்சாது சொல்லாட வல்லவர் மிகச் சிலரேஎன்பார் திருவள்ளுவர்,

**பகையகத்துச் சாவார் எளியவர் அரியர்**

**அவையகத்து அஞ்சா தவர் (குறள் 723)**

உலகப் புகழ்பெற்ற பெர்னாட்ஷா பேச்சுத் திறனைப் பெறுவதற்கு எத்தனையோ துன்பங்களை அடைந்தார் என்பதை அவரது வரலாற்று நூல் மூலம் அறியப்படலாம் (மு.வ. அறிஞர் பெர்னாட்ஷா, ப.26)

**சொல்வன்மை**

பேச்சு என்பது ஒரு சிறந்த கலை என்பதை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே உணர்ந்த வள்ளுவர் 'சொல்வன்மை' என்று தனியாக ஒரு அதிகாரமே அமைத்துப் பேச்சாற்றலின் முக்கியத்துவத்தைச் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார்.'சொல்' என்ற சொல்லை வள்ளுவர் 85 இடங்களில் பயன்படுத்தியுள்ளார். இன்னாச் சொல், இன்சொல்,பயனிலாச் சொல், அறச் சொல்,புறச் சொல், வெல்லும் சொல், செவிச் சொல், தெளிந்த சொல், சொல் வகை, சொல்லாடல், கடுஞ் சொல் என்று சொற்களைச் சிறப்பிக்கிறார்,

**நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்**

**யாநலத்து உள்ளதூம் அன்று** (குறள் 641)

என்னும் குறளில் சொல்வன்மை என்று சொல்லப்படும் நாநலம் மற்ற எந்த நலத்துள்ளும் அடங்குவது அல்லது தனிச்சிறப்புடையது ஆகும் என்று கூறியுள்ளார்.

நாவிலிருந்து வெளிப்படும் சொற்கள் எவ்வளவு வலிமையுடையதாக இருக்கவேண்டும் என்பதை விளக்குகிறார்.தன்னுடைய சொல்லில் தவறு நேராமல் காத்தல் நலம்.கேட்காதவரும் கேட்க விரும்பும் வண்ணம் தன்னுடைய சொல் அமைதஆஅவேண்டும்.தன் தகுதி அறிந்து பேசுதல் சிறப்பு.உலகத்தோடு ஒட்ட ஒழுகியதாக இருக்க வேண்டும். தன்னுடைய சொல்லை வெல்லக்கூடிய வேறு சொல் இல்லாதவாறு தரமான சொற்களைப் பயன்படுத்தல் வேண்டும்.பிறர் சொல்லின் நுண் பொருளைக் காணும் திறன் வேண்டும்.சோம்பல் இல்லாத அஞ்சாத, பிறர் அறிந்து உணர்ந்து கொள்ளும் வகையிலும் சொல் இருக்க வேண்டும். நாம் சொல்லும் சொற்களை வகை தொகைப்படுத்தி, வரிசைப்படுத்தி இனிமையாகச் சொல்லல் வேண்டும். சொற்பிழை,கருத்துப் பிழை, மொழிப் பிழை இல்லாமல் மீண்டும் மீண்டும் சொன்னதையே சொல்லாமலும் தெளிவாக விளக்கும் வகையில் சொல்லுதல் வேண்டும் என சொற்களின் சிறப்புக்களை குறள்களின் வழி முன் வைக்கிறார் எனலாம்.

கருத்துக்களை வரிசைப்படுத்தி இனிமையாகச் சொல்பவனின் சொற்பொருளை உலகம் விரைந்து ஏற்கொள்ளும் என்பதை,

**விரைந்து தொழிலேகேட்கும் ஞாலம் நிரந்தினிது**

**சொல்லுதல் வல்லார்ப் பெறின் (குறள் 642)**

வில் வேல் போன்ற ஆயுதங்களைக் காட்டிலும் ஆற்றல் வாய்ந்தைவை சொல்லாற்றால் அதனால் தான் வில்லேர் உழவர் பகை கொண்டாலும் கொள்க. சொல்லேர் உழவர் பகை கொள்ள வேண்டா என்று எச்சரிக்கின்றார் திருவள்ளுவர்.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க**

**சொல்லே ருழவர் பகை (குறள் 872)**

இத்தகைய ஆற்றல் வாய்ந்த சொல்வன்மையானது மக்களாட்சி அமைப்பில் இன்றியமையாதாகிவிட்டது, மக்களாட்சியின் அடிப்படை உண்மையே சொல்வன்மையில் தான் இருக்கிறது, சொல்வன்மை பெற்ற நாகரிகப் பேச்சாளர்கள் மக்களாட்சி அமைப்பின் தூண்களாகக் கருதப்படுவர் எனலாம்.பிறர் பேச்சை, அறிஞர் சொல்லை நாம் நிறைய கேட்க வேண்டும் என்பதற்காகவே, பொருட்பாலில் 'கேள்வி' என்ற அதிகாரம் அமைத்து, அதன் சிறப்புக்களைக் கூறியுள்ளார்.பயனில்லாத சொற்களைக் கூறுபவன் 'மனிதன்' அல்ல, அவன் மக்களில் 'பதர்' என்று மிகவும் கடுமையாகச் சாடியுள்ளார்.இதன் வழி சொல்வன்மை மிக்கவரை வெல்வது அரிது என்பது வள்ளுவர் கருத்து. மேலும் நன்றாக கற்றிருந்தும் சொல்வன்மை இல்லாமல் தான் கற்றதை பிறருக்குப் புரியுமாறு விரித்துச் சொல்லத் தெரியாதவர்கள், கொத்துக் கொத்தாகத் தோன்றியும் மணம் வீசாத மலரைப் போன்றவர்களே என்கிறார். சொல்திறன் மிக்கவனை வெல்வது அரிது என்பது வள்ளுவர் கருத்து, தளர்ந்து கிடக்கின்ற உள்ளங்களைச் சக்திமிக்க பேச்சாளனின் பேச்சு நிமிர்ந்து நிற்கச் செய்யும். இனிமையான பேச்சு எதிராளியையும் தன்பால் ஈர்க்கும். நகைச்சுவையான நல்ல பேச்சு சிரிக்கவும் சிந்திக்கவும் தூண்டும். கற்பதை விடவும் கேட்டறிதல் நன்று என்ற உண்மையைப் பேச்சாளன் உணர்ந்து பேச வேண்டும். என்ற உயரிய சிந்தனைகளை வள்ளுவத்தால் பெறமுடிகிறது எனலாம்.வள்ளுவரின் குறள் போல அனைவரும் நமது பண்பாட்டினை, பழமையை அறியும் வண்ணம் பேச்சாளர்களின் பேச்சு அமைதல் நலம்.

**முடிவுரை**

பேச்சுக்கலை என்பது ஆரவாரமான வணிகச் செயல்பாடன்று.முன்னர் பலகாலும் நெஞ்சில் விழுந்த சிந்தனை வித்துக்களின் வெளிப்பாடாகும்.அத்தகைய சிறப்பு மிக்க பேச்சுக் கலையைப் பலரும் எளிதாக பெற்று விட முடியாது. அதனால் தான் ஔவையார் பதினாயிரம் பேர்களில் ஒருவர்தான் பேச்சுவன்மை மிக்கவனாக விளங்கி வீறு பெற முடியும் என்கிறார்.(கா.சுப்பிரமணிய பிள்ளை உரை, தனிப்பாடற் திரட்டு ப 20) பேச்சு எப்படிப்பட்டதாக இருக்க வேண்டுமெனில், எந்த இடத்திலும், எச்சூழ்நிலையிலும் இனிமையாக, உண்மையாக,நம்பிக்கையாக,நன்மையாக, தெளிவாக இருக்க வேண்டும் என்று தமிழ் இலக்கியங்கள் சொல்லின் ஆளுமையை எடுத்துரைக்கின்றன எனலாம். சிறந்த சொல்வன்மை மிக்கவர்களாக விளங்கிய பலரும் தொடக்கத்தில் முயன்று தான் இக்கலையைப் பயின்றுள்ளனர்.முயற்சி திருவினையாக்கும் என்னும் வள்ளுவரின் குறள் வழிச் சொல்வன்மை பெற்றவர்கள் பலர். அறன் வலியுறுத்தல், இனியவை கூறல், அடக்கமுடைமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, வாய்மை, கேள்வி, சொல்வன்மை, அவையஞ்சாமை,ஆவை அறிதல் ஆகிய அதிகாரங்களில் பேச்சுக்கலையின் கூறுகளை பெறமுடிகிறது எனலாம்.இவ்வாறு திருக்குறளில் பேச்சின் பல்வேறு நிலைகள், தன்மைகள்,சிறப்பு போன்றவை குறிப்படப்பட்டுள்ளதுடன் பேச்சாற்றலின் முக்கியத்துவமும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. மனிதனை மனிதனாக்கிய அருங்கலைகளில் ஒன்று சொல்லாடல்.எனவேதான் பேசுபவரை சொற்செல்வர் என்றும்,கேட்கிறவரை செவிச்செல்வர் என்றும் தமிழ்மரபு பேசுகிறது.அவையிலே பேசுவது மனித உறவுகளை மேம்படுத்தும் ஒரு வினைப்பாடாகும்.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

ஜனநாயக நாட்டில் பேச்சே ஆயுதம். நல்ல பேச்சாளனே சமுதாயத்தில் மதிக்கப்படுகிறான், தலைவனாகிறான் என்பதையும் பேச்சின் சிறப்பாக கொள்ளமுடியும்.

**துணைநூற் பட்டியல்**

[1] முனைவர்.பா.சிவநேசன். “இலக்கிய இயக்கங்களின் கூறுகளும் தாக்கமும்”, சாரதா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு -2014.

[2] ப.முருகன் (ப.ஆ). “செவ்வியல் இலக்கியங்கள் பன்முகப் பார்வை –தொகுதி 1”, கங்காராணி பதிப்பகம் –பொழிச்சலூர், சென்னை-74, முதற்பதிப்பு – மார்ச் -2017.

[3] ச.சிவகாமி. “தமிழர் வாழ்வியல்”, மாதவி பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை -14 – முதற்பதிப்பு – 1998.

[4] சா.கிருட்டினமூர்த்தி (ப.ஆ), “தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி 1”, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, முதற்பதிப்பு 2005.

[5] இரா.இராசேந்திரன். “திருக்குறள் தெளிவான எளிய உரை”, திருமகள் நிலையம் –தி.நகர்,சென்னை-17, முதற்பதிப்பு –மே,2000.

[6] புலவர் என்.இ.ராமலிங்கம். “திருக்குறள் தெளிவுரை ஆங்கில ஆக்கத்துடன்” திருவள்ளுவர் பதிப்பகம் –ஆதம்பாக்கம், சென்னை-88, முதற்பதிப்பு, 2009.

[7] இளங்குமரனார். “திருக்குறள் வாழ்வியல் உரை” வள்ளலார் பதிப்பகம், ரோசன் நகர், போளூர் – 803. இரண்டாம் பதிப்பு – ஏப்ரல் 2017.

[8] க. அன்பழகன். “நீங்களும் பேச்சாளர் ஆகலாம்”, பூம்புகார் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு – 1995.

[9] அ.கி.பரந்தாமனார். “பேச்சாளராக” பாரி நிலையம் –சென்னை –இரண்டாம் பதிப்பு – ஜனவரி – 2016.

[10] முனைவர் கு. ஞானசம்பந்தன். “பேசும் கலை”, விஜயா பதிப்பகம், ராஜவீதி, கோயமுத்தூர் -01. முதல் பதிப்பு – ஏப்ரல் 2008.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**சிவசங்கர், வெ.** “திருக்குறளில் பேச்சுக்கலையின் கூறுகள்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, இதழ் 1, ஜீலை 2020, பக். 24-30. டிஒஐ: 10.5281/zenodo.3930594.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Sivasankar**, **V.** “Oration Skills in *Thirukkural*.” *International Journal of Tamil Language and Literary Studies,* vol. 3, no. 1, July 2020, pp. 24-30. DOI: 10.5281/zenodo.3930594.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# வள்ளுவரின் மருத்துவச் சிந்தனைகள்
# Valluvar's Medical Thoughts

**பா.சீனிவாசன்,** தமிழ் உதவிப்பேராசிரியர், டாக்டர்.ஆர்.கே.சண்முகம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கள்ளக்குறிச்சி.
**B.Srinivasan,** Assistant Professor, Dept Of Tamil, Dr.R.K.Shanmugam College of Arts and Science, Kallakurichi,
ORCiD: https://orcid.org/0000-0002-6838-3947
DOI: 10.5281/zenodo.3930600

## Abstract

*The period from the* 3rd *to the* 6-*th century is known as the "Sanka Maruya" period. During this period, Pathinenkeelkanaku appeared with the advent of Samana and Buddhism. These texts address the evils of murder, theft, lying, illiteracy and lust. Scholars at that time were doctors and psychologists. That is why they say that excessive diseases are caused by improper diet, alcohol consumption and anger. In the Pathinenkeelkanaku, they are named as Eladhi, sirupanjamoolam, and Thrikadukam, which are said to spread the disease through air, heat and water. In his ten verses, Valluvar describes the medical ideas of today's modern medical practitioners. The purpose of this study is to find them and make this world known.*

**Keywords:** Valluvar, Medicinal Thoughts, Food, Medicine.

### அறிமுகம்

கலைகளை போற்றி வளர்த்த தமிழர்கள் ஆயக்கலைகள் அறுபத்து நான்கனுள் மருத்துவக்கலையினையும் இடம்பெறச் செய்தனர். தொல்காப்பியர் காலத்தில் தோற்றம் பெற்ற தமிழ் மருத்துவம் சங்க காலத்தில் வளர்ச்சி அடைந்து சங்க மருவிய காலத்தில் மாற்றம் பெற்றது. பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தோன்றிய காலத்தினை தான் சங்க மருவிய காலம் என்பர். சங்க காலத்தில் ஒரு சிலரிடம் தொழிலாக பார்க்கப்பட்ட மருத்துவம் சங்க மருவிய காலத்தில் தொண்டாக மாறியது. தனி மனித நலனுக்காக மட்டுமல்லாமல் சமூக நலனுக்கும் மருத்துவம் பயன்படுத்தப்பட்டது. மருத்துவநோக்கில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் தனிச் சிறப்பு வாய்ந்தவை என்பதனை சிறுபஞ்சமூலம்,ஏலாதி,திரிகடுகம் போன்ற நூல்கள் நமக்கு உணர்த்துகின்றன. மேலும் மருத்துவத்தின் சிறப்புகளை திருக்குறளில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வள்ளுவப் பெருந்தகை மருந்து என்னும் அதிகாரம் வாயிலாக பதிவு செய்துள்ளார். மெய்ஞானிகள் பலரும் உடல் நோய் பற்றி மட்டுமே சிந்திக்க இவரோ மன நோய்கள் பற்றியும் கூறியவர். இவ்வாறு வையத்துள் வாழ்வாங்கு வாழவதற்கு அவர் கூறிய மருத்துவ நுட்பங்களை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### மருத்துவம்

இன்றய ஆங்கில மருத்துவம் கூறுவதனைப் போன்று மருத்துவ அறிவியலை உற்றவன்(நோயாளி), தீர்ப்பான்(மருத்துவன்), மருந்து, உழலைச்செல்வான்(மருத்துவ உதவியாளர்) என நான்கு வகையாக பிரித்து நோயினால் பாதிப்படைந்தவர்களுக்கு நோய் தீர்க்கும் முறையினை

**உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச்செல்வானென்று**
**அப்பால் நாற்கூற்றே மருந்து. (குறள்-950)**

என்ற குறட்பாவின் மூலம் எடுதுரைக்கின்றார்.

### நோய்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

இன்றய அறிவியல் வளர்ச்சியின் காரணமாக மருத்துவத் துறையும் வளர்ச்சி அடைந்தது. இதன் விளைவாக மனிதர்களுக்கு எற்படும் நோய்களை கண்டறிந்து தீர்வளிப்பது என்பது எளிதாக அமைந்திருன்றது. ஆனால் எவ்வித மருத்துவ வளர்ச்சியும் இல்லாத அக்காலத்தில் மனித உடல் வாதம்(வாயு) பித்தம்(வெப்பம்) சிலேத்துமம்( நீர்) என்ற மூன்று நிலைகளால் ஆனது என்றும் இவை சமநிலையில் இயங்கினால் உடல் ஆரோக்கியமாக உள்ளது. ஆனால் இவை சம நிலையை இழுந்தால் நோய்கள் தோன்றும் என்பதனை:

**மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**

**வளிமுதலா எண்ணிய மூன்று. (குறள்-941)**

வள்ளுவர் என்ற குறட்பாவின் வழி சுட்டிக்காட்டுகின்றார். மேலும் நோய் என்பது உடலில் மட்டும் ஏற்படுவது இல்லை மன உளச்சலால் ஏற்படுவதுமே நோய் ஆகும். என்வே உடல் நோய்,உள நோய் என்ற இரண்டுமே தவிர்க்கப் பட வேண்டும் என்பதனை:

**காமம் வெகுளி மயக்கம் இவ்மூன்றன்**

**நாமம் கெடக்கெடும்நோய். (குறள்-360)**

என்ற குறட்பாவில் வலியுறுத்துகின்றார்.

**நோயினைக்கண்டறிதல்**

மருத்துவர் என்பவர் நமக்கு ஏற்படும் நோய்க்கான காரணத்தை மருத்துவதின் வாயிலாக கண்டறிந்து தீர்வு கூறுதல் வேண்டும். இன்றைக்கு நிலையே வேறு வயிற்று வலி என்று மருத்துவரிடம் சென்றால் அது ஏற்படுவதற்கான காரணம் அறியாமல் மருத்துவம் பார்க்கும் நிலை தான் உள்ளது. முதலில் நோயாளியின் உடல் மாற்றங்களை ஆராய்தல் வேண்டும் அதன் பின் நோயினை கண்டறிந்து சிகிச்சை அளித்தால் தான் நோய் ஏற்படாமல் தடுக்க முடியும் என்பதனை:

**நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**

**வாய்நாடி வாய்ப்பச் செயல். (குறள்-948)**

என்ற குறளின் வாயிலாக எடுத்துரைப்பதனைக் காணலாம்.

**நோய் வருவதற்கானவழிகள்**

தனக்கு நோய் வாராமல் பாதுகாத்துக்கொள்ள நோய் வருவதற்கான காரணங்களை அறிந்து கொள்ள வேண்டும். நோய் என்பது செயல்களாலும் உணவினாலுமே வருகின்றது என்பது வள்ளுவர் வாக்கு என்பதை பரிமேழகர் உறையின் மூலம் அறியலாம்.மேலும் உடல் உழைப்பின்மையின் காரணமாகவும் நோய் தோன்றும் என்பதனை:

**நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்**

**கெடுநீரார் காமக் கலன். (குறள்-948)**

என்ற குறட்பாவின் வாயிலாக உணர்த்துவதனைக் காணலாம்.

**நோய் தடுப்புமுறை**

இன்றய மருத்துவ அறிவியல் சிறப்பான பயிற்சிகளை மேற்கொள்வதன் மூலம் உடலில் நோய் அண்டமால் பாதுகாத்துக் கொள்ள முடியும் என்கின்றது. இதனைத் தான் வள்ளுவர் நோய் வந்த பின் சிகிச்சை செய்வதை விட வருமுன் காப்பதே சிறந்தது என

**வருமுன்னர்க்காவாதான்வாழ்க்கை எரிமுன்னர்**

**வைத்தூறு போலக் கெடும். (குறள்-435)**

என்ற குறட்பாவின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

**மன நோய்**

மனம் என்னும் சொல் மன்னுதல் என்னும் சொல்லின் அடிப்படையாக பிறந்தது. அதாவது ஆன்மாவில் நிலைபெற்று விளங்குவது. மனம் என்பது பார்த்தல், கேட்டல், நுகர்தல், பேசுதல், உணர்தல்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

போன்ற ஐம்புல உணர்வுகளோடு தொடர்புடையது. மனித வாழ்விற்கு அடிப்படையாக இருப்பேதாடு மனிதைனைய இயக்கிக் கொண்டிருக்கும் பேராற்றலே மனம் என்பது கரு.நாகராசன் அவர்களின் கூற்றாகும். இம்மனதில் தோன்றும் தானக பேசிக்கொள்வது,காரணம் தெரியாமல் வருத்தப்படுவது,கோபப்படுவது, பிறரை துன்புறுத்தி இன்புறுவது,அதீதீத கற்பனை போன்ற நடத்தைகளே மனநோய் ஆகும். இவற்றை பற்றி அறிந்து தான் வள்ளுவர் மனநல ஆலோசகராக தீர்வளிக்கின்றார்.

**மது**

இன்றய நவ நாகரிக உலகினில் மது பழக்கத்திற்கு அடிமயாவோர் எண்ணிக்கை என்பது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகின்றது. இதுவும் ஒருவிதமான மனநோயே ஆகும். அப்பழக்கத்தினால் வெறுப்பு,பொய் பேசுவது, திருடுவது, குடிக்கத் தடுப்பவர்களை அடிப்பது என மனதளவில் பாதிப்பினை ஏற்படுத்தி வாழ்வினை சீரழித்து கொண்டிருக்கின்றது. இதனை உணர்ந்து தான் வள்ளுவர்:

**துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்**
**நஞ்சுண்பார் கள்ளுண் பவர். (குறள்-926)**

என்ற குறட்பாவில் கள் என்னும் நஞ்சினை குடித்து அறிவு மயங்கி கிடப்பவர்களை பார்த்து மன நோயாளிகள் என்கின்றார். மேலும் மருத்துவராக அவர்களுக்கு மதுவினை விட்டொளிக்க ஆளுமை திறனை வளர்த்து மனக்கட்டுப்பாடுடன் வாழ்தல் வேண்டும் என்ற தீர்வினையும் அளிக்கின்றார்.

**சினம்**

மனதில் பொறாமை தோன்ற காரணமாக விளங்குவது சினம். இதுவும் மனநோயே. சினம் கொள்பவரை மட்டுமல்லாமல் அவரைச் சுற்றி இருப்பவர்களையும் அழிக்கும் தன்மை கொண்டது..சினம் தோன்ற காரணம் சிந்திக்காமல் செயல்படுவதும் பொறுமையின்மையும் ஆகும். இதனால் தான் சினத்தை அடக்க முடியாமல் இருப்பவர்களை நோயுற்றவர் எனக் கூறுகின்றார். பகையை வளர்க்கும் அமைதியை குலைக்கும் மன மனமகிழ்சியை கெடுக்கும் கோபத்தினை கொண்டவர்களை இறந்தார் என்றும் விவரிக்கின்றார். அப்படிப்பட்ட சினத்தினை அடக்க அமைதி ஒன்றே தீர்வாக அமையும் என்பதனை :

**மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய**
**பிறத்தல் அதனான் வரும். (குறள்-303)**

இக்குறட்பாவின் வழி எடுத்துரைக்கின்றார்.

**உடல் நோய்**

நம்முடைய முன்னோர்கள் உணவையே மருத்துவப் பொருளாக பயன்படுத்தியவர்கள் என்பதை **இஞ்சி மஞ்சட் பைங்கறி பிறவும் (மதுரைக்காஞ்சி289)** என்ற மதுரைக்காஞ்சி பாடல் வழி அறியலாம். இது போன்று சீரகம், மிளகு போன்ற சமயற் கூடத்தில் இருந்த அஞ்சறைப் பெட்டி சமையல் பொருள்கள் கூட மருந்தாக பயன்பட்டன. அதனால் தான் உணவே மருந்து என்றனர். நோயில்லா வாழ்வை உணர்த்துவது உணவு நெறியாகும். உடலுக்கும் மனதுக்கும் நன்மை தரும் உணவினை உட்கொண்டால் உடலுக்கு மட்டுமல்ல உயிர்க்கும் பாதிப்பில்லை என்பர். ஆனால் இன்றய நிலையில் நம் உடலில் நோய்கள் தோன்றுவதற்கு ஓய்வின்மை, காலம் தவறிய உணவு,துரிதஉணவுப் பழக்கவழக்க மாற்றம் போன்றவைகளே மூலக்காரணமாக அமைகின்றன. உணவு என்ற பெயரில் இன்று விடத்தை உட்கொண்டு வருகின்றோம். இதனையெல்லாம் உணர்ந்த வள்ளுவப் பெருந்தகை மருத்துவராக உணவுக் கட்டுப்பாடு பற்றி வலியுறுத்தி கூறுகின்றார்.

**உணவின் அளவு**

அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு என்பார்கள். எதிலும் ஒரு கட்டுப்பாடு என்பது தேவை. அது நாம் உண்ணும் உணவிலும் இருக்க வேண்டும் என்பதை ஒருவேளை உண்பவன் யோகி, இரு

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

வேளை உண்பவன் போகி, மூன்றுவேளை உண்பன் ரோகி, நான்கு வேளை உண்பவன் போகி என்பதனை,

**ஒருபோது யோகியேஒண்டளிர்க்கைமாதே**
**இருபோது போகியேயென்ப—திரிபோது**
**ரோகியேநான்குபோதுண்பா னுடல் விட்டுப்**
**போகியேயென்று புகல் உண்பான் (நீதிவெண்பா-9)**

என்ற நீதிவெண்பா பாடல் கொண்டு அறியலாம். மேலும் புறநானூற்று பாடலில் நக்கீரர் என்னும் புலவர் பழந்தமிழர்கள் அளவோடு உண்ண வேண்டும் என்ற விழிப்புணர்ச்சி பெற்றிருந்தார்கள் என்பதனை, **உண்பது நாழி உடுப்பவவை இரண்டே ( புறநானூறு-189:5)** என்று வரியின் மூலம் உணர்த்துகின்றார். இதனைப் போன்றே அளவாக உண்ணுதலின் அவசியத்தினையும் தவறினால் வரும் தீங்கினை பற்றியும் வள்ளுவர்,

**அற்றால் அறவறிந்து உண்க அஃதுடம்பு**
**பெற்றான் நெடிதுய்க்கும்ஆறு. (குறள்-943)**

என்ற குறட்பாவில் வலியுறுத்தி கூறுகின்றார்.

**உணவு செரிமானம்**

உலகினில் வாழும் மக்கள் அனைவருக்கும் ஏற்படும் பிரச்னைகளாக வயிற்று எரிச்சல், புளிப்பு ஏப்பம், வாயுத் தொல்லை, வயிற்று வலி, நெஞ்செரிச்சல், மலம் கழிக்கும் உணர்வு போன்றவற்றை குறிப்பிடலாம். . இவைகள் ஏற்பட முக்கிய காரணம் செரிமான கோளாறே எனலாம்.நாம் உண்ணும் உணவு தான் நம் உடலுக்கு தேவையான சக்தியை அளிக்கின்றது. இவ்வாறு உண்ணும் உணவினை செரிக்க வைத்து நம் உடலுக்கு தேவையான ஆற்றலை தருவது ஹைட்ரோ குளோரிக் அமிலம் என்னும் திரவம். இது சரியாக சுரக்க வேண்டுமெனில் “முறையான உணவுபழக்கம்’’ என்பது அவசியம் ஆகும். இல்லையெனில் எவ்வித பயனும் கிடைக்காது. இவற்றை எல்லாம் உணர்ந்ததால் தான் வள்ளுவர் உண்ட உணவு நன்கு செரித்த பின் அடுத்த உணவினை உண்ணுங்கள். அவ்வாறு உண்ணுகின்ற பொழுது உங்களிடம் நோய் அண்டாது எவ்வித மருந்தும் உட்கொள்ள வேண்டியதில்லை என கூறியதை,

**மருந்தென வேண்டாவாம்யாக்கைக்கருந்திய**
**தற்றது போற்றி உணின் (குறள்-942)**

என்ற குறட்பாவின் வழி அறியலாம். வள்ளுவரின் கருத்தையொட்டி ஆங்கில நாடக ஆசிரியர் சேக்ஸ்பியரும் உணவினை உண்ண வேண்டும் என்ற ஆர்வம் உடல் நலன் ஆகிய இரண்டும் உணவு நன்கு செறித்தலை பொறுத்தே அமையும் எனக் கூறுவது உற்றுநோக்க தக்கதாக அமைகின்றது.

**உணவு ஒவ்வாமை**

மருத்துவர்கள் ஒருவரின் உடல் தன்மைக்கு சில உணவுகள் ஒத்துழைக்காமல் போகும் அந்நிலைதான் ஒவ்வாமை என்கிறனர். நம் உடலில் உள்ள நோய் எதிர்ப்பு சக்தி குறைவதே நாம் ஒவ்வாமையால் பாதிக்கப்படுவதற்கு முக்கிய காரணமாகும். அதனால் அதற்கு எதிராக போராடும் ஆரோக்கியமான உணவுகளை உட்கொள்வது என்பது அவசியமாகும்.அவ்வாறு இல்லையெனில் வயிற்று வலி, தோலில் அரிப்பு போன்ற நோய்கள் வரும் அல்லது இருக்கின்ற நோயினை மிகுதியாக்கும். இச்செய்திகள் அனைத்துமே இன்றய அறிவியல் வளர்ச்சியின் காரணமாக மருத்துவச் சோதனைகளில் கண்டறி யப்பட்டவை. ஆனால் எவ்வித அறியியல் வளர்ச்சியும் இல்லாத இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உடலுக்கு பொருந்தும் உணவினை அளவோடு உண்ண வேண்டும். அவ்வாறு உட்கொள்கின்ற பொழுது எவ்வித நோயும் நம் உடலில் அண்டாது என அறிவியல் சிந்தனையோடு வள்ளுவர் கூறியதனை,

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்**

**ஊறுபா டில்லை உயிர்க்கு (குறள்-945)**

என்ற குறட்பாவின் வாயிலாக அறியலாம்.

**தொகுப்புரை**

நுண்மாண் நுழைபுலமும் தொலைநோக்கு பார்வையும் கொண்டு வள்ளுவர் மனிதர்கள் ஒழுக்கமாக மனக்கட்டுப்பாடுடன் வாழ மட்டுமல்லாமல் அம்மனதில் ஏற்படும் நோய்களை பற்றி கூறி அதற்கு தீர்வு காணும் மனநல மருத்துவராக விளங்குகின்றார்.நாம் உயிர் வாழ உணவு என்பது அவசியமானதாகும். அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு என்ற பழமொழிக்கேற்ப கட்டுப்பாடே இல்லாமல் உணவு அருந்தினால் நோய்கள் ஏற்படும் என்கின்றார். உணவுக்கட்டுப்பாட்டை கடைபிடித்தலே அதற்கு தீர்வு என உணவியல் வல்லுநராகவும் கூறுவதனைக் காணமுடிகின்றது. மேலும் நல்ல மருத்துவம் என்பது நோயை நீக்குவது அன்று, நோயே வராமல் தடுப்பது என்ற கருத்தாக்கமே வள்ளுவரின் மருத்துவச் சிந்தனையாக அமைகின்றது.

**துணை நின்ற நூல்கள்**

[1] பரிமேழகர் உரை. “திருக்குறள்”, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 2017.

[2] கலைஞர் உரை. “திருக்குறள்”, திருமகள்நிலையம், சென்னை, 2010.

[3] கு.மோகனராசு . “திருவள்ளுவர் ஒரு மருத்துவர்”, மணிவாசகர்பதிப்பகம், சென்னை.

[4] புலவர்.தே.ப.சின்னசாமி. “திருக்குறளில் மருத்துவம்”,மணிவாசகர்பதிப்பகம், சென்னை.

[5] முனைவர்.எல்.இராமசாமி. “திருக்குறளில் மருந்து”.

[6] டாக்டர் கதிர் முருகு. “மதுரைக்காஞ்சி”, சாரதா பதிப்பகம், சென்னை, 2013.

[7] புலியூர்க் கேசிகன். “புறநானூறு”, சாரதா பதிப்பகம், சென்னை, 2019.

[8] முனைவர் கதிர் முருகு. “நீதி வெண்பா”, சாரதா பதிப்பகம், சென்னை, 2007.

[9] மலர். “திருக்குறள் காட்டும் மருத்துவம் - ஓர் ஆய்வு”

[10] இரா.மாரியப்பன். “திருவள்ளுவர் ஒரு மனநல மருத்துவர்”

[11] http://www.tamilvu.org/

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**சீனிவாசன், பா .** “வள்ளுவரின் மருத்துவச் சிந்தனைகள்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, இதழ் 1, ஜீலை 2020, பக். 31-36. டிஒஐ: 10.5281/zenodo.3930600.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**

**Srinivasan, B.** “Valluvar’s Medical Thoughts.” *International Journal of Tamil Language and Literary Studies,* vol. 3, no. 1, July 2020, pp. 31-36. DOI: 10.5281/zenodo.3930600.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# பேராண்மை என்ப தறுகண்
# Peraanmai Yenba Tharukann

**முனைவர் தே. தேன்மொழி,** வேல்ஸ் அறிவியல் தொழில் நுட்ப ஆராய்ச்சி நிறுவனம், பல்கலைக்கழகம், சென்னை.
**Dr. D. Thenmozhi**, Assistant Professor of Tamil, Vels Institute of Science Technology & Advanced Studies, Chennai.
ORCiD: https://orcid.org/0000-0002-5837-0579
**DOI: 10.5281/zenodo.3930604**

## Abstract

*In classical Tamil Life, both warfare and traditional technique fighting in the Sangam Period belonged to an ethical method. Tamil people divided life into two ways. One is an inner life (Agam) and another is an outer life (Puram). An Inner life talks about war and culture. They formed their own principles while fighting in the war. Their rules were honest. During war, they would tight from morning to evening. During night time, both rival parties would take rest. They particularly beat drums to start war in the morning. They did same in order to stop fighting. It was not matter how long the war goes on. The soldiers never attacked enemy soldiers when they did not have swords. Such a noble principle was followed. Moreover, enemy soldiers would be given a chance to come next day with the swords. On the other hand, soldiers would not kill or attack hinding soldiers. They would wait for them till hinding soldiers came to the battle field. This was the noble principle which Tamil people followed in their life. The compassion was prevailed among the Tamil People. Soldiers would show mercy when an enemy soldiers lost there or lost half of their soldiers. They always would like to maintain honour, or self respect and dignity forever. They were very careful not to bring dishonour to their family and community generally a human being has five enemies in him. One of them is sex. Tamil people primarily controlled sex themselves. They never aspired a wife of another man. Therefore, the aim of this article is to highlight such great ethics of the Tamil people with Thiruvalluvar's quote.*

**Keywords:** *Thirukural***,** Neethi Ilaikkiyam, Peraanmai, Magnanimousness.

### முன்னுரை

ஒரு மன்னன் பகைவரோடு போரிடக் கருதுவானாயின் கருதிய உடன் படையெடுக்க மாட்டான். தனது கருத்தைப் பகைவரது நாட்டார்க்குப் பறையறைந்து தெரியப்படுத்துவான். அப்போது,

**ஆவும் ஆணியர் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடையீரும் தென்புலம்**
**வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**பொன்போற் புதல்வரைப் பெறாதீரும்**

**எம்அம்பு கடிவிடுதும் நும்மரண் சேரும் (புறம். 9 (1-5)**

என்று அறிவிக்கப்படும். இதனால் தமிழர் போர்தொடங்கும் போது அறநெறியுடன் தொடங்கினர் என்பதை அறியலாம். மேலும்,

**பலிபெறு நன்னகரும் பள்ளியிடனும்**

**ஒலிகெழு நான்மறையோர் இல்லும் நலிவொரீஇப்**

**புல்லா இரியப் பொருநர் முனைகெடுத்த**

**வில்லார்க்கு அருள் சுரந்தான் வேந்து (புறப்பொருள் வெண்பாமாலை)**

இதில் போர் நடக்கும் நாட்டில் மறவர்கள் பலியிடப்படும் கோவில்களுக்கும், துறவிகள் வாழும் பள்ளிகளுக்கும், வேதவொலி மிக்க அந்தணர்களின் இல்லங்களுக்கும் எந்த நலிவையும் செய்யவில்லை. இவை போன்ற தக்கார் உறையும் இடங்களை நீக்கிப் பிற இடங்களில் போரிட்டுப் பகைவரை வென்றுள்ளனர். அவ்வாறு அறநெறிப்படி போரிட்ட மறவர்களின் அரசியல் அறமாகக் கருதப்பட்டது.

போரில் விழுப்புண்பட்ட மறவன், மீண்டும் உயிர்வாழ விரும்பாமல் தன் புண்ணைத்தானே வேலால் கிழித்துக்கொண்டு உயிர் நீப்பதும் உண்டு. போரில் தனது அரசன் இறந்ததைக் கண்டு தாமும் உடன் இறப்பதற்காகச் சில மறவர்கள் உயிர் வேட்டலும் உண்டு. சில மறவர் செங்சோற்றுக்கடன் வாய்ப்பதற்காகத் தமதுயிரை அவியாக (பலியாக) இடுதலும் உண்டு. மேலும்,

**கூடி முரசிரங்கக் கொய்யுளைமா முன்னுகளப்**

**பாடி பெயர்த்திட்டான் பல்வேலான் - கோடி**

**நிதியந் திறையளந்தார் நேராரும் தன்கீழ்**

**முதியமென் றாறி முரண் (புறப்பொருள் வெண்பாமாலை. 45)**

இதில் பகைநாட்டை முற்றவும் அழிப்பதாகச் சினந்து சென்றபோதும் பகையரசன் பணிந்து, கோடிப்பொருள்களைத் திறையாக அளந்து தந்ததால் சினம் குறைந்து செல்லும் அரசனின், பணிந்த பகைவர்க்கு அருளும் பேராண்மை கொண்டவராகத் திகழ்ந்தனர். (தா.ம. வெள்ளை வாரணம், புறப்பொருள் வெண்பாமாலை, திருப்பனந்தாள் மடவெளியீடு, 1967)

'பிண்டம் மேய பெருஞ்சோற்றுநிலை' என்பது வேந்தன் போர் தலைக்கொண்ட பிற்றை ஞான்ற போர்குறித்து படையாளருந்தானும் உடனுண்பாண் என்பதில் அரும்படைத்தானை அமர்வேட்டுக் கவித்த பெரும்படைத் தலைவர்க்கு பெருஞ்சோறு வகுத்து (சிலப்பதிகாரம். ஆர். கை. சண்முகம் செட்டியார். புதுமலர் நிலையம் வெளியீடு. 1946.வஞ்சி. கால்கோள். 48, 49) எனவரும் சிலப்பதிகாரச் செய்தியும், அரசர்களின் பேராண்மையை வெளிப்படுத்துகிறது.

இத்தகைய பேராண்மையை புறப்பொருள் வெண்பா மாலையில் பேராண்முல்லை என்னும் சினமிக்க மன்னன் போர்க்களத்தைக் கைக்கொண்டதைக் கூறும் புறத்துறை (தா. ம. வெள்ளைவாரணம். புறப்பொருள் வெண்பா மாலை. திருப்பனந்தாள் வெளியீடு. 1967 ப. எ. 8,26) விளக்குகிறது.

**பேராண்மை**

பேராண்மை என்ற சொல்லுக்கு மிக்க வீரம், மானம், அரிய வீரச்செயல், அருஞ்செயல் என்றும் heroism great valour, honour heroic exploit, feet of arms என்ற ஆங்கிலச் சொல்லும் பேராண்மையைக் குறிக்கின்றது என இசையினி தமிழ் அகராதி, சென்னைப் பல்கலைக்கழக தமிழ்ப் பேரகராதி, தமிழ்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

தமிழ் அகரமுதலி,(tamilpulavar. Org. Internet.) லிஃப்கோ தமிழ் அகராதி Marinabooks.com.internet.) போன்றவை குறிப்பிட்டுள்ளன. வீரசூரம் என்று தமிழ் லெக்சிகன் (Tamil lexicon. Google Books. Retrieved 25 dec 2014.) குறிப்பிடுகின்றது.

பேராண்மை என்பதற்கு “பேராண்மை அரிய செயல்” என திவாகர நிகண்டு(சேந்தன் திவாகரம். திவாகர முனிவர். கழக வெளியீடு.) குறிப்பிட்டுள்ளது. பேராண்மைக்குத் திருவள்ளுவர் “பிறன்மனை நோக்கா பேராண்மை” எனவும், “சீர் அல்ல செய்யாரே சீரொடு பேராண்மை” வேண்டுபவர் எனவும் “பேராண்மை என்ப தறுகண்” எனவும் குறிப்பிடுவர்.

**சீர்மிகு செய்யாரே சீரொடு பேராண்மை**

புகழொடு பெரிய ஆண்மையும் விரும்புகின்றவர். புகழ் தேடும் வழியில் குடிப்பெருமைக்கு ஒவ்வாத செயல்களைச் செய்யமாட்டார். (மு.வ. உரை)

இதனை,

**சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு**
**பேராண்மை வேண்டுபவர். (குறள். 962)**

என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். தம் குடிமைக்கு இளிவரவுகளைச் செய்யாமல் புகழுடன் மானத்தை நிறுத்துதலை உடையவர் எவ்விடத்திலும் நிலைகுலையாத திண்மை உடையவனாக இருத்தலை பேராண்மை என பரிமேலழகர் (முனைவர்இரா. சாரங்கபாணி.திருக்குறள். பரிமேலழகர் உரை.மணிவாசகர் பதிப்பகம். சென்னை.) குறிப்பிட்டுள்ளார்.

புகழ்மிக்க வீரவாழ்க்கையை விரும்புகிறவர் தனக்கு எப்படியும் புகழ் வரவேண்டுமென்பதற்காகமான உணர்வுக்குப் புறம்பான காரியத்தில் ஈடுபடமாட்டார் என கலைஞர் (Kuralpro. Pro.internet.) விளக்கமளித்துள்ளார். தமக்கு சிறப்பையே தருமானாலும் தம் குடியின் சிறப்புக்குப் பொருந்தாத செயல்களை, புகழும் மானமும் நிலைப்பதை விரும்புகிறவர்கள் செய்ய மாட்டார் என புலியூர் கேசிகன்(Kuralpro. Pro.internet.) உரையும் புகழுக்குரியவற்றைச் செய்யும்போதும் தம் குடும்பப்பெருமைக்கு ஏற்காத இழிவுகளைச் செய்யமாட்டார் என சாலமன் பாப்பையாவின் உரையும் (Kuralpro. Pro. Internet.) விளக்கம் தருகிறது.

**பிறன்மனை நோக்கா பேராண்மை**

புறப் பகைகளை அடக்கும் ஆண்மையுடையார்க்கும் உட்பகை ஆகிய காமம் அடக்குதற்கு அருமையின், அதனை அடக்கிய ஆண்மையைப் பேராண்மை என பரிமேலழகர் குறிப்பிடுவதை,

**பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு**
**அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு. (குறள். 148)**

என்று வள்ளுவர் இரண்டடியில் குறிப்பிட்டுள்ளார். பிறனொருவன் மனையாளைத் தமதுள்ளத்தால் கருதாமையாகின்ற பெரிய ஆண்மைத் திண்மையானது என பழம் உரையாசிரியர் காளிங்கர் (திருக்குறள். மணக்குடவர் உரை . (பதிப்பு மெய்யப்பன் ) மணிவாசகர் பதிப்பகம் . 2005.)குறிப்பிட்டுள்ளார்.

சமர்க்களத்திலே வெட்டி மீண்டுவருவது ஆண்மை அல்ல, பிறன்மனையை நோக்காமல் இருப்பதே ஆண்மை என பரிதிமாற்கலைஞர் உரைப்பதும், பிறன் மனையை விரும்பி நினையாத

**E-ISSN: 2581-7140**
**Vol. 3, Special Issue 1, July - 2020** **Available at: www.ijtlls.com**

பேராற்றல், பெரியவீரம், ஆண்தகைமை போன்ற சொற்களை பேராண்மைக்கு இலக்கணமாக இன்றைய உரையாசிரியர்கள் (Kuralpro. Pro. Internet) பயன்படுத்தியுள்ளனர்.

மேலும் பிறன்மனை நோக்கா பேராண்மை கொண்டு விளங்குவதோடு அல்லாமல் நிறைந்த ஒழுக்கமுடையவராகவும் திகழ்ந்தனர் என்பதை இத்திருக்குறள் தெளிவுப்படுத்துகிறது.

**பேராண்மை என்ப தறுகண்**

பேராண்மைக்கு பல பொருள் திருவள்ளுவர் குறிப்பிட்டிருந்தாலும் படைச்செருக்கு என்னும் அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ள பேராண்மை எத்தகையது என்பதை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பேராண்மை என்ப தறுகண்ஒன்று உற்றக்கால்**

**ஊராண்மை மற்றதன் எஃகு, (குறள். 773)**

என்ற திருக்குறள் பேராண்மையை விளக்குகிறது. பகைவரை எதிர்க்கும் வீரத்தை, மிக்க ஆண்மை என்று கூறுவர், ஒருவர் துன்பம் வந்தபோது பகைவர்க்கும் உதவி செய்தலை அந்த ஆண்மையின் கூர்மை என்று மு.வ. (Kuralpro. Pro. Internet) குறிப்பிட்டுள்ளார்.

ஒன்று உற்றக்கால் அஞ்சாமையை ஒருவனுக்குப் பெரிய ஆண்மையென்று சொல்லுவர். உலகியலறிந்து செய்தலை அவ்வாண்மைக்குப் படைக்கலமென்று மணக்குடவர் உரை விளக்குகிறது. பகைவர்மேற் கண்ணோடாது செய்யும் அறத்தை நூலோர் மிக்க ஆண்தன்மையென்று சொல்லுவர். அவர்க்கு ஒரு தாழ்வு வந்ததாயின் கண்ணோடி அது தீர்த்தகோடர் பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் அதற்குக் கூர்மை என்று சொல்லுவர். ஊராண்மை என்பது உபகாரியம் தன்மை. அதாவது இலங்கையர் வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும்படத் தமினாய் அகப்பட்டானது நிலைமையை நோக்கி அயோத்தியர் இறைமேற்செல்லாது, “இன்று போய் நாளை நின்தானையோடு வா” என விட்டாற்போல்வது என பரிமேலழகர் உரை (திருக்குறள். பரிமேலழகருரையுடன். காசி மடம் . திருப்பனந்தாள். 1978.) விளக்குகின்றது.

பகைவரிடம் இரக்கம் காட்டாது பொரும் வீரத்தைப் பெரிய ஆண்மை என்று சொல்வார்கள். ஆனால் பகைவர்க்கு குறைபாடு நேருமானால் இரங்கி அவர்க்கு உதவிசெய்வது ஆண்மையின் மிகுதியாகும் என்று சி. இலக்குவனார் (Kuralpro. Pro. Internet) குறிப்பிட்டுள்ளார்.

இன்றைய ஆசிரியர்கள் பகைவரைக் கொல்லுதல் வீரம், பகைவர்போல் இரக்கங்காட்டாது போரிடும் வீரத்தை நூலோர் பேராண்மை (மிக்க ஆண்தன்மை) என்று கூறுவர். ஆண்மைக்குச் சிறப்பு அச்சமற்ற தன்மையே எனப்படும். உறுதியாய்ப் போர்புரிதலைப் பெரிய வீரம் என்று அறிஞர் சொல்லுவர் என்று விளக்கம் கூறியுள்ளனர்.

பகைவர்க்குத் துன்பம்வரின் உதவுதல் வீரத்தின் சிகரம், வீரர்க்குத் தாழ்வு நேர்ந்தால் அதனை விலக்க இரங்கிச் செய்யும் உதவியைப் பேராண்மையின் கூர்மை என்று கூறுவர்

இதுகாறும் திருவள்ளுவரின் படைச்செருக்கில் உள்ள பேராண்மை என்பது பகைவர்மேல் கண்ணோடாது போர்புரிதலை வீரம் என்று சொல்லுவர். அவர்க்குத் துன்பம் வரின் ஊராண்மை அவ்வீரத்தின் கூர்மையான தன்மையாகும் என்பதே திருவள்ளுவர் கூறிய பேராண்மையாகும்.

**பேராண்மை - ஊராண்மை**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

பகைவருடன் கடுமையாகப் போரிடுவது வீரம், அவர் இடருறும் நிலையில் பகைவர்க்கு உதவுதல் வீரத்தில் நாகரிகம். பகைவரை எதிர்த்து அஞ்சாமல் போர்புரியும் வீரச்செயல் பேராண்மையாம் தன்னிடம் சண்டையிடும் அப்பகைவனுக்கு ஊறு உண்டானபோது அவனை வெல்ல எண்ணாமல் அவனுக்கு உதவிநிற்கும் ஆண்மையோ வீரத்தின் வீரமாம்.

போரில் பகைவர்மேல் கண்ணோடாது தாக்கி அடக்கும் வீரத்தைப் பேராண்மை என்பர். அதே பகைவர் போர்க்களத்தில் படைக்கலத்தையிழந்தோ காயமுற்றோ இக்கட்டில் தத்தளிக்கும் நிலையில், அக்குறைவை நீக்கிக் கொள்ளும் பொருட்டு உதவி செய்தல் அந்த ஆண்மைக்குச் சிறப்புச் செய்வதாகும். மனித நேயத்துடன் கூடிய அப்பண்பாடு அவ்வீரத்தைவிட கூரானது. அதுவே ஊராண்மையாகும்.

மிகப்பெரிய ஆளுமை என்று சொல்லப்படுவது வீரம்தான். பேராண்மையிடையே காட்டப்படும் ஈரம் வீரத்தின் வீரம். அது போர்க்களத்திலும் அருள் நெஞ்சினராய் இருப்பது படைக்கலம் இறந்த பகைவரொடு போர் புரிவது வீரமாகாது. தம்மொடு ஒத்த நிலை இல்லாதபோது, கண்ணோடி அல்லது தாக்காதொழிந்து அவரைவிடுதல் உண்மையான வீரமாகும். ஒத்தநிலையில் இல்லாரோடு பொருதல் என்பது ஒத்தகருவி இல்லாதாரோடு போர்புரிதல் அதாவது வாளையிழந்த பகைவனிடம் வாளால் போர் செய்தல் புண்பட்ட வீரனை நலிதல், ஊனமுள்ள பகைவனை ஊறுசெய்தல், எதிர்க்க முடியாத பலவீனமான சூழ்நிலையில் எதிரி நிற்றல் போன்றனவாகும்.

**முடிவுரை**

பேராண்மை என்ற சொல் ஏற்றமிகு தோற்றம் பெற்று திருக்குறளில், மிளிர்கிறது. ஆண்மை என்னும் சொல்லினை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு பொருள்களில் மற்ற குறட்பாக்களில் சொல்லப்பட்டிருந்தாலும் பேராண்மை எனும் சொல் மேற்குறிப்பிட்ட குறட்பாக்களில் தனிச்சிறப்புப் பெறுகின்றது. மக்கள், விலங்கு ஆகியவற்றைத் தன்படை வலிமையால் உடல் உறுதியால் ஆளுவது ஆண்மையாகும். அவ்வகையில் பேராண்மை என்பது வீரம் என பொருள்படும். இங்கு பகைவன் படைபலம் இழந்து நின்றபோது இரக்கம் காட்டுதலும், தன் புகழுக்காக குடிப்பெருமைக்கு இழிவு ஏற்படாத வகையில் செயல்படுதலும், தனக்கு உரியள் அல்லாதாரை நோக்கா மனவலிமையையும் பேராண்மை என்ற சொல் விளக்கி நிற்கிறது.

வலிமையோடு போர்செய்தல் வீரம் எனினும் வலிமையிழந்த பகைவர்க்கு எதிராகப் போர் செய்ய மறுப்பதோடல்லாமல் அவர்களுக்கு உதவுதல் போன்ற நல்ல போர்நெறிகளை வீராதிவீரனான ஊராண்மையாளன் போற்றிக்காப்பான். “மாற்றான் சோர்ந்த விடத்துக் கண்ணோட்டம் காட்டல் செருக்கு என்ற தாம்” என்ற வள்ளுவனின் வாக்கு, ஒருவர் - மேல், மற்றொருவர் - கீழ், என்னும் உணர்ச்சி பிறவாமல் தம்முள் சகோதரத்துவ ஒருமைப்பாட்டுணர்ச்சிகள் தழைத்து ஒற்றுமையடைய ஓரே சமுதாயமாய் வாழப் பயிலுவதே பேராண்மை கொண்ட ஊராண்மை அல்லது நாகரிகத்தின் நல்லியல்பாகும் என்பதை பறைசாற்றுகிறது.

**துணை நூற்பட்டியல்**

[1] ஔவை துரைசாமிப்பிள்ளை. *புறநானூறு,* தமிழ் மண் பதிப்பகம், சென்னை.

[2] ஆர்.கே. சண்முகம் செட்டியார். *சிலப்பதிகாரம்,* புதுமலர் நிலையம் வெளியீடு, 1946.

**E-ISSN: 2581-7140**
**Vol. 3, Special Issue 1, July - 2020** **Available at: www.ijtlls.com**

[3] மணக்குடவர் உரை. *திருக்குறள்*, (பதிப்பாசிரியர் ச. மெய்யப்பன்) மணிவாசகர் பதிப்பகம், 2005.

[4] முனைவர் இரா. சாரங்கபாணி, *திருக்குறள் பரிமேலழகர் உரை*, மணிவாசகர் பதிப்பகம், 2003.

[5] திருக்குறள், பரிமேலழகருரையுடன், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள், 1978.

[6] Thiruvalluvar, *Thirukural*, Tamilnadu.com (April 2013)

[7] Thirukural, Thirukural.gokalnath.com

[8] Tamil Lexicon, Google Books, Retrieved 25 Dec. 2014.

[9] அகர முதலி, தமிழ் விக்கிப்பீடியாத்தளம்.

[10] தமிழ் தகவல் களஞ்சியம், வலைத்தமிழ்.com

[11] நா. கிருஷ்ணசாமி நாயுடு. "சதுரகராதி." இ. மா. கோபால கிருஷ்ண கோன் வெளியிட்டது. 1928.

[12] திவாகர முனிவர். "சேந்தன் திவாகரம்." கழக வெளியீடு.

[13] "க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி." க்ரியா பதிப்பகம். 2008.

[14] "அகர முதலி." செந்தமிழ் சொற்களஞ்சியம். இணையம்.

[15] tamilpulavar. Org(internet).

[16] Tamil.Emotionally. Org(internet).

[17] Marinabooks. Com(internet).

[18] Kural.pro(internet).

[19] வலைத்தமிழ். Com(internet).

[20] தா.ம. வெள்ளை வாரணம், *புறப்பொருள் வெண்பாமாலை*, திருப்பனந்தாள் மடவெளியீடு, 1967.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**தேன்மொழி, தே.** "பேராண்மை என்ப தறுகண்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* தொகுதி 3, இதழ் 1, ஜீலை 2020, பக். 37-42. டிஒஐ: 10.5281/zenodo.3930604.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Thenmozhi**, **D.** "Peraanmai Yenba Tharukann." *International Journal of Tamil Language and Literary Studies,* vol. 3, no. 1, July 2020, pp. 37-42. DOI: 10.5281/zenodo.3930604.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# திருக்குறளில் காதலும் காத்திருப்பும்
# Love and Awaiting in *Thirukkural*

**முனைவர்.மு.ரா.மஜிதா பர்வின்,** உதவிப்பேராசிரியர், சதக்கத்துல்லாஹ் அப்பா கல்லூரி, திருநெல்வேலி.
**Dr. M.R.Majitha Burvin,** Assistant Professor of Tamil, Sadakathullah Appa College, Tirunelveli
ORCiD: https://0000-0003-0481-8400
DOI: 10.5281/zenodo.3930606

## Abstract

*The central concept of "Thirukkural" is life with virtues. Love is considered one of the truest literature considering beloved's longing for the lover and the lover's longing for the beloved has been projected in a virtual manner. As a didactic literature "Thirukkural" presents love with poetry with fine sensations of life. Men and women love to be together with great thoughts and ideas dedicating themselves for one another. The soul is connected to virtue and the body is connected with lust. These two are fundamentals of human life. Thiruvalluvar has spoken in the power of kamathuppaal, the love, the medium of ensuing lust. Hence, the article discusses on the chosen topic.*

**Keywords:** Love, Awaiting, *Thirukkural*

**முன்னுரை**

"'காத்திருக்கிறேன்... வந்துவிடுகிறேன்…' என்பதுதான் இரண்டாயிரம் ஆண்டுகால தமிழ்க் கவிதையின் மையம். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக எழுதியும் இந்தச் சொற்கள் மட்டும் உயிர்ப்புடன் இன்றும் இருக்கின்றன. 'காத்திருக்கிறேன்' என்பதற்கும் 'வந்துவிடுகிறேன்' என்பதற்கும் இடையில் இருப்பது, 'நெஞ்சின் தவிப்பு'. நெஞ்சின் தவிப்பைத்தான் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ்க் கவிதை மட்டுமல்ல, உலகக் கவிதையும் எழுதிக்கொண்டிருக்கிறது." (இமையம்., தி இந்து., 2018) என்ற இமையத்தின் வரிகளுக்கு ஏற்ப சங்க இலக்கியங்கள் போன்று திருக்குறளும் இல்வாழ்க்கையில் நிறைந்திருக்கும் அன்பை காதலை ரசனைமிக்க ஊடலை காமத்தை எடுத்து இயம்புகின்றன. காதல் வாழ்க்கையை இல்லற வாழ்க்கையின் இன்பத்தை காதலோடு காத்திருப்பதன் நிலையை காமத்தோடு கலந்திருக்கும் பேரின்பத்தை வாழ்வியல் நெறியோடு திருக்குறள் எடுத்துரைக்கிறது.

காமத்துப்பாலில் தலைவனை நினைத்து தலைவி தவித்து நிற்பதும், தலைவியை நினைத்து தலைவன் ஏக்கத்துடன் இருப்பதும், ஊடலுக்குப் பின்னான கூடலும் காதலுக்குப் பின்னான காமத்தையும் இலக்கியநயம் சொட்டச் சொட்ட உவமையோடு எடுத்துரைத்துள்ளன. காத்திருப்பும் வந்துவிடுகிறேன் என்பதற்கும் இடையிலான நெஞ்சத்தின் தவிப்புதான் இலக்கியத்தின் மையமாக விளங்குகின்றது. காதலை கவித்துவத்துடன் திருக்குறள் முன்வைக்கின்றது.

**அன்பும் காதலும்**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**‘அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்’** என அன்பை அடைத்து வைக்கக் கூடிய தாழ்ப்பாள் இல்லை என்றும் **‘அன்பின் வழியது உயிர்நிலை’** என்று அன்பின் வழியாகத்தான் உலகத்தில் உயிர்கள் நிலைபெற்று வாழ்கிறது என்பதனையும் திருக்குறள் எடுத்துரைக்கிறது. அன்பை நேசி. அன்பை சுவாசி. பிற உயிர்களிடத்து அன்பு செலுத்து என அனைத்து இலக்கியங்களும் அன்பை போதிக்கின்றது. அவற்றுள் பக்தி இலக்கியமும் விதிவிலக்கல்ல.

**காதலாகி கசிந்துருகி கண்ணீர் மல்கி**
**ஓதுவார் தம்மை நல்நெறிக்கு உய்ப்பது**
**வேதநான் கினும் மெய்ப்பொருள் ஆவது**
**நாதன் நாமம் நமச்சிவாயமே. (பா.3320)**

என்று பாடியுள்ளார் திருஞானசம்பந்தர். அன்பின் பிறிதொரு வடிவமான காதல் பருவமடைந்த ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே தோன்றுகிறது. இதனையே இலக்கியங்கள் **‘ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் கூடி இன்புறுவது களவு’** என்று காதல் வாழ்க்கைக்கு விளக்கம் தருகிறது. திருக்குறளில் நட்பு என்னும் சொல்லை காதல் என்னும் பொருளில் திருவள்ளுவர் கையாண்டுள்ளார்.

காதல் சிறப்புரைத்தல் என்னும் அதிகாரத்தில் ஆணின் பார்வையில் தோன்றும் காதலையும் பெண்ணின் பார்வையில் தோன்றும் காதலையும் உடல் ரசனையும் உள்ளக் கிடக்கையையும் திருக்குறள் விவரிக்கின்றன. காதலிக்கும் அவனுக்குமான நட்பானது எத்தகையதென்றால்,

**உடம்போடு உயிரிடை என்னமற்று அன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு (குறள்-1122)**

என்ற குறளில் உடம்பிற்கும் உயிருக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு போன்றதே இப்பெண்ணிற்கும் எனக்கும் உள்ள நட்பாகும். உடலும் உயிரும் போல பிரிக்க முடியாத அன்பினால் இருவரும் இணைந்துள்ளனர். காதலனுக்கும் அவளுக்குமான நட்பினை விளக்குகையில்,

**கண்உள்ளின் போகார்; இமைப்பின் பருவரார்**
**நுண்ணியர்எங் காத லவர். (குறள்-1126)**

என்ற குறளானது என் காதலர் கண்ணிலிருந்து நீங்கமாட்டார். இமைத்தாலும் வருந்தார், மிகவும் நுட்பமனவர் என்று விளக்கம் தருகிறது. காதலர் கண்ணில் நிறைந்திருக்கும் காட்சியை இன்றுவரை கவிதைகளாக எழுதிக்கொண்டிருக்கின்றனர்.

**நெஞ்சத்தார் காத லவராக செய்துஉண்டல்**
**அஞ்சுதும் வேபாக்கு அறிந்து. (குறள்-1128)**

கண்ணை இமைத்தால் காதலர் மறைந்துவிடுவார் என்றஞ்சி இமையாமல் விழித்திருக்கின்றேன். அதை அறியாமல் ஊரார் அவரைப் பழிக்கின்றார்கள். **‘உடம்போடு உயிரிடை’** என்று காதலர்களுக்கு இடையே இருக்கும் நட்பானது உடலுக்கும் உயிருக்கும் உள்ள நெருங்கிய தொடர்பைப் போன்றதாகும். **‘பாலோடு தேன்கலந்தற்றே’** என்று காதலியின் எச்சிலானது பாலும் தேனும் கலந்ததைப் போன்று இனிமையைத் தருகிறது என்கிறார்.

**தனிமையை**
**தள்ளுபடி செய்து**
**காதல் வாங்கினேன்…**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**காதலோ என்னை**

**தள்ளுபடி செய்து**

**கனவுகளை வாங்கியது…** (www.eluthu.com)

என்று ஜெ.செல்வம் என்பவரின் காதல் கவிதை காதலர்களின் நிலை நன்கு உணர்த்துகிறது.

**பிணக்கும் ஊடலும்**

ஊடலின்பின் கூடல் தரும் இன்பம் அளப்பரியது. ஊடலுக்குப்பின்பு அன்பு பெருகும். ஊடல் என்பது சின்னஞ்சிறு சண்டை. வறட்டுக் கோபம். மன வருத்தம். அந்த ஊடலைத் தீர்த்து வைக்கும் நிலைதான் கூடல். பகலுக்குப் பின்பு வரும் இரவைப்போல அமாவாசைக்குப் பின் தோன்றும் பௌர்ணமியைப்போல புயலுக்குப்பின் வீசும் தென்றலைப்போல அலைக்குப்பின்னிருக்கும் அமைதியைப்போல ஊடலுக்குப் பின்னான கூடல் பேரானந்தத்தை கொடுக்கிறது.

**ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்**

**கூடி முயங்கப் பெறின் (குறள்-1330)**

ஊடுவது காமத்திற்கு இன்பம் பயக்கும். ஊடியபின் கூடித் தழுவுதல் அந்த ஊடலுக்கு கூடுதல் இன்பத்தைத் தரும். ஊடலானது எப்படி அமைந்திருக்கவேண்டுமென்று திருவள்ளுவர் குறிப்பிடுகிறார் என்றால்,

**உப்புஅமைந் தற்றால் புலவி அதுசிறிது**

**மிக்கற்றால் நீள விடல் (குறள்-1302)**

உணவில் உப்பை அளவோடு சேர்ப்பதைப் போன்றது ஊடல். அதை அளவைக் கடந்து நீட்டிப்பது. உணவில் உப்பு மிகுவது போன்றது. உணவில் சேர்க்கப்படும் உப்பானது கூடினாலும் வீணாகிவிடும். குறைந்தாலும் வீணாகிவிடும். அதைப்போன்றுதான் ஊடலும் அளவோடு இருக்க வேண்டும்.

**'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' 'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு'** என்பன போன்ற பழமொழிகளின் கருத்தும் இதனையே வலியுறுத்துகிறது. ஊடல் நிகழ்ந்தபின் இருவரும் கூடல் நிகழ்த்தினால்தான் இல்வாழ்க்கை இனிதாகும் என்பதனை,

**ஊடி யவரை உணராமை வாடிய**

**வள்ளி முதல்அரிந் தற்று (குறள்-1304)**

பிணங்கியவரின் ஊடலைத் தீர்த்து அவரைத் தழுவாது விடுவது நீரின்றி வாடிய கொடியின் வேரை அறுத்துவிட்டது போன்றதாகும். இல்வாழ்க்கையில் சிறிய சண்டையும் கோபமும் வந்து போக வேண்டும். ஆனால் நீடிக்கக் கூடாது. அவ்வாறு வரவில்லையானால் அவ்வாழ்வு வீண் என்பதை,

**துனியும் புலவியும் இல்லையாயின் காமம்**

**கனியும் கடுக்காயும் அற்று. (குறள்-1306)**

பெரும் பிணக்கும் சிறு மனவேறுபாடும் இல்லாவிட்டால் **'கனிந்தழுகிய பழத்தையும் முற்றாத பிஞ்சினையும்'** போன்று காதல் பயனற்றுப் போகும். நாணயத்தைப் போன்று வாழ்க்கையும் இன்பம் துன்பம் இரண்டும் கலந்ததாக அமையப்பெற்றுள்ளது. இரண்டில் ஒன்று இல்லையெனில் இல்வாழ்க்கை இனிமை பயக்காது. ஊடலை யாரிடம் நிகழ்த்த வேண்டும் என்பதையும் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

ஊடல் பாங்கினை துனி, புலவி என்னும் சொற்களால் வேறுபடுத்திக்காட்டுகிறது. இதன் வழியே பார்க்கும்போது துனி என்பது ஊடலின் உச்சகட்டம். கனிந்தபழம் போன்றது. கனிந்த பழம் போன்றது. துனி என்றால் நெருங்கி இருத்தலாகும். பழுத்திருக்கும் ஊடலும் கூடலில் இன்பமாக அமைந்திருக்கும். பொய்யை இட்டுக்கட்டிக்கொண்டு ஊடும் பாங்கு புலவி எனப்படும். இது பழுக்காமல் பிஞ்சு நிலையில் இருக்கும் கருக்காய் போன்றது. அதாவது ஊடலின் தொடக்கநிலை புலவி எனப்படும்.

தண்ணீரும் நிழலும் இனிமை பயப்பது போன்று ஊடலும் அன்புடையவர்களிடம் காட்டினால்தான் இனிமை தரும். ஊடலானது எவ்வாறு அமையப்பெற்றிருக்க வேண்டுமென்றால்

**புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு**
**நீர் இயைந் தன்னார் அகத்து? (குறள்-1309)**

நிலத்தோடு நீர் கலந்தாற்போன்று காதலரிடம் ஊடுவதைவிட இன்பந்தரும் தேவருலகம் உண்டோ? இல்லை. இவ்வாறு காதலானது நிலமும் நீரும்போல ஒன்றாக கலந்திருக்க வேண்டும் என்கிறார் திருவள்ளுவர். இக்கருத்தினையே சங்க இலக்கியமும் முன்வைக்கின்றது.

**யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி யறிதும்**
**செம்புலப் பெயனீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே. (குறுந்தொகை-40)**

என்ற பாடலில் தலைவன் தலைவியின் காதலானது செம்மண் நிலத்தில் விழுந்த மழைநீரைப்போல பிரிக்க முடியாதவாறு கலந்திருக்க வேண்டும் என்கிறார் செம்புலப் பெயனீரார்.

தலைவியின் பிணக்கும் சிறுகோபமும் தலைவனின் அன்பை வெளிப்படுத்தச் செய்கின்றது. ஊடலைத் தணிக்க காமத்தை கையிலெடுக்கச் செய்வதும் காமத்தின் வழியாக இன்பத்தில் மூழ்கித் திளைப்பதையும் திருக்குறள் விளக்குகின்றது.

**களியும் காமமும்**

**'மலரினும் மெல்லியது காமம்'** என்கிறார் திருவள்ளுவர். உலகிலுள்ள எல்லா உயிர்களுக்கும் காமம் என்பது இயல்பாகத் தோன்றும் ஓர் உணர்வு. பசிப்பது, தாகம் எடுப்பது, சுவாசிப்பது போன்று காமமும் இயல்பான ஒன்று. உயிர்ப்பெருக்கத்தின் அடிப்படை காமம். மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் காம உணர்வு ஒன்றாயினும் அதை அனுபவிக்கும் விதத்தில் இரண்டிற்கும் வேறுபாடு உள்ளது. மனிதர்கள் ஆணும் பெண்ணுமாக கூடி மகிழ்வதையும் கூடலில் விளையும் உள்ளப் புணர்ச்சியையும் உடல் புணர்ச்சியையும் புணர்ச்சி விதும்பல் என்ற அதிகாரம் கூறுகிறது.

காமத்தையும் காமம் தரும் இன்பத்தையும் காமத்தால் ஏற்பட்ட துன்பத்தையும் விளக்குவதற்காக மிகச்சிறப்பான உவமைகளை திருவள்ளுவர் கையாண்டுள்ளார். **'கள்ளினும் காமம் இனிது'** என்கிறார். கள்ளை விடவும் அதிகமான போதை தருவதும் இன்பம் தருவதும் காமத்திற்கு மட்டுமே உண்டு.

**காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்**
**நாணுத்தாழ் வீழ்த்த கதவு. (குறள்-1251)**

நாணம் என்னும் தாழ்ப்பாள் பொருந்திய கதவைக் காமமாகிய கோடாரி உடைத்துவிடும். நாணம் எனும் பெண்மையை உடைக்கும் பலம் காமத்திற்கு உண்டு. கொழுப்பை நெருப்பிலிட்டால்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

உருகுவது போன்று தலைவனுடன் கூடும்போது பிணக்கு நீங்கி இன்பம் தருகின்றது என்பதை **'நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ'** என்ற குறள் விளக்குகின்றது.

காமத்தைக் கடந்தால் யோகியாகலாம். ஆனால் அதனைக் கடப்பது எளிதன்று. காமமானது ஒருவருக்கு மட்டும் பாரமாக அமைந்துவிடக் கூடாது. அது இருபுறமும் காவடி சுமப்பதுபோன்று இருவருக்கும் சமமாக இருக்க வேண்டும். காமம் என்னும் கடலைக் கடப்பது கடினம் என்பதை

**உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்**
**செறாஅஅய் வாழிய நெஞ்சு. (குறள்-1200)**

நெஞ்சமே இன்னுடன் கூடாதவருக்கு உன் துன்பத்தைத் தெரிவிக்கும் மனமே நீ வாழ்ந்திட காமக்கடலைக் கடக்க முடியாத நீ அதைத் தூர்க்க முயல்வாய். அது பெரிய காரியம்.

**நோம் என் நெஞ்சே நோம் என் நெஞ்சே**
**இமை தீய்ப்பன்ன கண்ணீர் தாங்கி**
**அமைப்பதற்கு அமைந்ததம் காதலர்**
**அமைவுஇலர் ஆகுதல் நோமென் நெஞ்சே**
**காமம்சேர் குளத்தார் (குறுந்தொகை-4)**

என் நெஞ்சமானது வருந்துகின்றது. இமைகளைத் தீய்ப்பதுபோல வெம்மையான என் கண்ணீரைத் தடுத்து துடைப்பவராய் முன்பு இருந்தார். ஆனால் இப்போது நம்மோடு அவர் இல்லை. அவரில்லாத தனிமை என்னை வாட்டுகிறது. இக்கவிதையின் வழியாக தனிமையின் துயரினை தலைவி எடுத்துரைக்கிறாள்.

**'கடல் அன்ன காமம்'** என்று கடலை விடவும் காமம் பெரிது என்கிறது திருக்குறள். கடலின் நீட்சியையும் ஆழத்தையும் போன்றது காமம்.

**காமக் கடல்மன்னும் உண்டே; அது நீந்தும்**
**ஏமப் புணைமன்னும் இல். (குறள்-1164)**

காம வேட்கை கடல் போன்று பரந்து விரிந்துள்ளது. அக்கடலைக் கடந்து செல்வதற்கான தோணிதான் இல்லை. காமத்தைக் கடக்கும் வழி தெரியாமல் தவிக்கும் நிலையை விளக்குகையில் **'காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்'** என்று காமமாகிய கடலை நீந்தியும் அதன் கரைகளைக் காண முடியவில்லை என ஏங்கித் தவிக்கிறாள் தலைவி. இரவானது கழியாமல் நீண்டுகொண்டேயிருக்கிறது. காமக் கடலுக்கும் இரவுக்கும் துணையாக தலைவி விழித்திருக்கிறாள். காமத்தில் மூழ்கித்திளைக்கும்போது கடலளவு இன்பம் அளிக்கிறது. அக்காமம் விளைவிக்கும் துன்பம் கடலைவிடவும் பெரிதாக வருத்துகிறது.

**உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்**
**கண்டார் மகிழ்செய்தல் இன்று. (குறள்-1090)**

மதுவானது உண்டால்தான் மயக்கத்தைத் தரும். ஆனால் காமமானது கண்டாலே மகிழ்ச்சியைத் தரும். மதுவினைக் காட்டிலும் காதலியைக் காணும் கண்களுக்குத்தான் அதிகமான போதையை ஏற்படுத்துகிறது. நீங்கினால் சுட்டெரிக்கவும் நெருங்கினால் தணியவும் வல்லது தீயை ஒத்த காம நோய். காமநோயால் வாடுவோரின் நிலையை விளக்கும் சங்கப்பாடலானது,

**இடிக்கும் கேளிர் நும்குறை யாக**
**நிருக்கல் ஆற்றினோ நன்றுமன்; தில்ல**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்**

**கையில் ஊமன் கண்ணிற் காக்கும்**

**வெண்ணெய் உணங்கல் போலப் பரந்தன்று**

**இந்நோய்; நோன்றுகொளற் கரிதே (குறுந்தொகை-58)**

கதிரவனின் வெம்மையால் பாறையில் வைக்கப்பட்ட வெண்ணெய்க்கட்டி உருகி வழிகின்றது. அதன் அருகில் இரண்டு கையில்லாத வாய்பேசமுடியாத ஒருவன் கையறு நிலையாய் நிற்பதுபோல தலைவியின் காமத்தை வெளியில் சொல்ல முடியாமல் தவிக்கிறாள். இவ்வாறு திருக்குறளும் சங்க இலக்கியமும் காதலையும் காமத்தையும் எடுத்துரைக்கின்றன.

**பிரிவும் காத்திருப்பும்**

காதலரின் பிரிவும் பிரிந்திருந்த காலத்தில் ஒருவர் மற்றொருவரின் வருகைக்காக காத்திருப்பதும்தான் காதலை அதிகப்படுத்துகிறது. தலைவனை எண்ணி தலைவி காத்திருக்கும் ஒவ்வொரு கணமும் தவிப்பும் ஏக்கமும் மனதை வாட்டிவதைக்கிறது. முன்பொருநாள் தலைவனுடன் மகிழ்ந்திருந்த காலத்தில் நடந்த நிகழ்வுகளை நினைத்துப் பார்த்து இன்பம் அடைந்தாலும் அவன் அருகில் இல்லாததை நினைத்து துன்பத்தில் வாடுகிறாள். நினைவுகள் இன்பத்தையும் பிரிவு துன்பத்தையும் கொடுக்கிறது என்பதை **'அவர்வயின் விதும்பல்'** என்னும் அதிகாரம் விளக்குகின்றது.

**வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும்; அவர்சென்ற**

**நாள் ஒற்றித் தேய்ந்த விரல். (குறள்-1261)**

காதலர் சென்ற நாட்களை குறித்து வைத்து சுவரில் வரையப்பட்ட கோடுகளை விரல்களால் தொட்டு எண்ணிப்பார்த்ததில் கைவிரல் ரேகைகள்தேய்ந்து போயின. அவர் வருகையை எதிர்பார்த்து கண்களும் ஒளி இழந்தன. பிரிவானது உடலையும் மனத்தையும் வருத்துகின்றது.

**ஒருநாள் எழுநாள்போல் செல்லும் சேண்சென்றார்**

**வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு. (குறள்-1269)**

தொலைதூரம் சென்ற காதலர் வரும் நாளை நினைத்து வருந்தும் மகளிர்க்கு, ஒருநாள் ஏழுநாள்களைப் போல நீண்டு செல்லும். தலைவனின் வருகைக்காக தலைவி காத்திருக்கும் நாட்கள் நெடியது. ஒருநாள் கழிவது ஏழுநாட்கள்போல் தோன்றுவதால் மாதங்கள் வருடங்களாகவும் வருடங்கள் யுகங்களாவும் **தோன்றுவதால் தனிமை வருத்துகிறது.**

**அம்ம வாழி தோழி மகிழ்நன்**

**ஒரு நாள் நம்மில் வருவதற்கு எழுநாள்**

**அழும் என்ப அவன் பெண்டிர்**

**தீ உறு மெகிழுகின் ஞெகிழ் வனர் விரைந்தே (ஐங்குறுநூறு – 32)**

தலைவன் இல்லத்திற்கு ஒருநாள் திரும்பி வந்தான். அவனை நினைத்து பெண்கள் ஏழுநாள் அழுது தீர்த்தனர். இப்பாடலின் வழியாக பிரிவின் வலியையும் ஏக்கத்தையும் அறியமுடிகின்றது. தனிமையைப்போக்க தலைவனின் வரவினை எதிர்பார்த்திருக்கும் தலைவியின் நிலையை விளக்குகையில்,

**கூடிய காமம் பிரிந்தார் வரவுஉள்ளிக்**

**கோடுகொடு ஏறுமென் நெஞ்சு (குறள்-1264)**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

காதலோடு கூடியிருந்த காமத்தை விட்டுப்பிரிந்து சென்றவரின் வருகையை எதிர்பார்த்து என் நெஞ்சம் மரமேறிக் கிளை கிளையாய் பார்க்கின்றது என்று தலைவியின் நிலையை விளக்குகிறார் திருவள்ளுவர்.

**புலப்பேன்கொல்; புல்லுவேன் கொல்லோ; கலப்பேன்கொல்**
**கண்அன்ன கேளிர் வரின். (குறள்-1267)**

காதலராகிய கண்ணாளர் காலம் கடந்து வருவதை நினைத்து நான் அவருடன் பிணங்குவேனோ, தழுவுவேனோ, கூடுவேனோ அறியேன். இக்குறளின் வழியாக தலைவியின் உளவியல் நிலையை அறிந்துகொள்ள முடிகிறது.

**முடிவுரை**

காமத்துப்பாலில் களவு வாழ்க்கை குறித்து 7 அதிகாரமும் கற்பு வாழ்க்கை குறித்து 18 அதிகாரமும் பேசப்பட்டுள்ளன. காதல், காமம், ஊடல், ஏக்கம் தவிப்பு குறித்துத்தான் 250 குறட்பாக்களும் பேசுகின்றன. ஆணும் பெண்ணும் மனதால் இணைவது காதல். உடலால் இணைவது காமம். இவையிரண்டும் மனித வாழ்வுக்கு அடிப்படை. காதலையும் ஊடலையும் அதன்பின் நிகழும் காமத்தையும் ரசனயோடு திருக்குறள் எடுத்துரைக்கிறது. இல்லற வாழ்வின் இனிமையும் சிறப்பும் தலைவின் தலைவியின் அன்பினால்தான் விழைகின்றது. பெண் ஆணைக் கொண்டாடுவதும் ஆண் பெண்ணைக் கொண்டாடுவதும் வாழ்க்கையின் அடிப்படை என்பதை விளக்குகிறது. குடும்ப வாழ்வில் மகிழ்ச்சி கூட வேண்டுமென்றால் பிணக்கும் சிறு மனவேறுபாடும் இருந்தால்தான் கூடல் நிகழும்போது கூடுதல் இன்பம் பெருகும். திருக்குறள் அன்பு, காதல், ஊடல், பிரிவு, காமம் என மனிதனின் உடல் சார்ந்த இன்ப துன்பங்களையும் உளம் சார்ந்த இன்பதுன்பங்களையும் பொருத்தமான உவமைகளோடு எடுத்துரைத்துள்ளது. வைரமுத்துவின் கவிதை வரிகள் காதலின் ஆழத்தையும் வீரத்தையும் வெளிப்படுத்துகிறது. இக்கட்டுரையின் வழியாக காலவளர்ச்சியில் மாறாதது காதலோடு காத்திருப்பதும் காதலரின் வருகை எதிர்பார்த்து நிற்பதும் காமகிளர்ச்சியில் தனிமையின் துயரினை அனுபவிப்பதும் கூடி மகிழ்ந்த காலத்தை நினைத்து ஏங்குவதும் உடல் மாற்றம் உள்ள மாற்றத்தை மறைக்க முயல்வதும் என உளவியல் சார்ந்த சிந்தனைகளையும் திருக்குறள் வாயிலாக கண்டறிய முடிந்தது.

**துணைநூற்பட்டியல்**

[1] அரவிந்தன்.மு.வை. ‘‘சங்க இலக்கியமும் திருக்குறளும்’’, முத்து பதிப்பகம், வளவனூர், 1970.

[2] இராமசாமி.ஆவே. ‘‘திருக்குறள் தரும் உவமை இன்பம்’’, செல்வி பதிப்பகம், காரைக்குடி., 2000.

[3] கிருஷ்ணன்.பெ(உ.ஆ). ‘‘திருக்குறள் தெளிவுரை’’, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை-600014, 2003.

[4] சிதம்பரனார்.வ.உ(உ.ஆ). ‘‘திருக்குறள்’’, பாரி நிலையம், சென்னை-108, 2008.

[5] செயபால்.இரா(உ.ஆ). ‘‘அகநானூறு’’, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட், சென்னை, 2011.

[6] தட்சிணாமூர்த்தி.அ.,(உ.ஆ). ‘‘ஐங்குறுநூறு’’, நியூசெஞ்சுரிபுக்ஹவுஸ்(பி)லிட், சென்னை, 2011.

[7] தேவநேயப்பாவாணர்.ஞா(உ.ஆ). ‘‘திருக்குறள் தமிழ் மரபுரை’’, ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை-038, 2011.

[8] நாகராசன்.வி. ‘‘குறுந்தொகை’’, நியூசெஞ்சுரிபுக்ஹவுஸ்(பி)லிட்., சென்னை, 2011.

[9] வைரமுத்து. ‘‘இந்தப்பூக்கள் விற்பனைக்கல்ல’’, கிழக்கு பதிப்பகம், சென்னை-14, 2009.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com


**இணையதளங்கள்**
www.imayam.annamalai@blogspot.com
https://ta.wikipedia.org
www.eluthu.com


**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**மஜிதா பர்வின், மு.ரா.** "திருக்குறளில் காதலும் காத்திருப்பும்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, இதழ் 1, ஜீலை 2020, பக். 43-50. டிஓஐ: 10.5281/zenodo.3930606.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Majitha Burvin, M.R.** "Love and Awaiting in *Thirukkural*." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 3, no. 1, July 2020, pp. 43-50. DOI: 10.5281/zenodo.3930606.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# வள்ளுவர் கூறும் வாழ்வியல் நெறிமுறைகளும் "குன்னிமுத்து" நாவலும்
# Valluvar's Life Ethics and the Novel "Kunnimuthu"

**யா.லலிதா,** முனைவர் பட்ட ஆய்வாளர், நேசமணி நினைவு கிறிஸ்தவக் கல்லூரி மார்த்தாண்டம்.
Y.Lalitha,Ph.D.Research Scholar, Nesamoney Memorial Christian College Marthandam.
ORCiD: https://orcid.org/0000-0001-7117-6546
**முனைவர். கோ.சி.கோலப்பதாஸ்,** உதவிப் பேராசிரியர், பயோனியர் குமார சுவாமி கல்லூரி, நாகர்கோவில்.
Dr.Kolappadhas, Assistant Professor,Tamil Department, Pioneer Kumara Swamy College, Nagercoil.
ORCiD: https://orcid.org/0000-0003-1600-8034
**DOI: 10.5281/zenodo.3930608**

## Abstract

*Valluvar's Life Ethics and the Novel "Kunnimuthu" is a research article title that describes Valluvar's Life virtues, Education, Discipline, Humanism, Friendship, Lovingness, Refinement, Hospitality, that all are connected and described in the writer Kumaraselva's "Kunnimuthu" Novel. The novel relates and connects all the ethics based on Vilavancode region. Valluvar's life and ethics has been revealed in the characters of the novel which has been explored in this article. Valluvar's Life values are the basic norms of genuine human life. By following the life ethics, the human society will live meritorious and cheerfully and be as golden examples to the future generations.*

**Keywords:** Valluvar, Life Ethics, Novel "Kunnimuthu"

### முன்னுரை

தமிழில் தோன்றிய அற நூல்கள் யாவற்றிலும் தலை சிறந்து விளங்குவது திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளாகும். அது தமிழன்னையின் மணிமுடியாய்த் திகழ்கிறது. உலக மக்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் நன்மை தரும் அறம், பொருள, இன்பம் ஆகியவற்றைச் செம்மையாக விளக்குகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளாக மனிதனை நல்வழியில் நடத்திச் செல்வது நம் திருக்குறள் மட்டுமே. திருக்குறள் மனிதனின் அன்றாட வாழ்க்கையின் ஒழுக்க நெறிமுறைகளின் தொகுப்பாக படைக்கப்பட்டுள்ளது. திருக்குறளில் உள்ள ஒவ்வொரு குறளும் மனித வாழ்க்கையை மேலோங்கச் செய்கிறது. திருவள்ளுவர் தனிமனித வாழ்வு, குடும்ப வாழ்வு, காதல் வாழ்வு ஆகிய களங்களில் நின்று திருக்குறளைப் படைத்துள்ளார். தமிழ் மொழியில் கீதை என்றும், தமிழ் மறை என்றும், முப்பால் என்றும் பல நிலைகளில் இந்நுல் பேசப்படுகிறது.

இந்நூலில் குறிப்பிடுகின்ற வாழ்வியல் நெறிமுறைகள் பலவும் எழுத்தாளர் குமார செல்வா விளவங்கோடு வட்டாரத்தை மையப்படுத்தி வட்டார வழக்கில் எழுதிய *குன்னிமுத்து* நாவலிலும் காணக்கிடக்கிறது. நாவலில் வருகின்ற கதாப்பாத்திரங்களின் மூலமாக இவ்வாழ்வியல் நெறிமுறைகள் வெளிப்படுகிறது. இவ்வாழ்வியல் நெறிமுறைகள் இக்கட்டுரையில் ஆராயப்படுகிறது.

### வாழ்வியல்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

வாழ்வியல் என்பது நம் வாழ்விலே மேற்கொள்ள வேண்டிய நெறிகளை - முறைகளை– பண்புகளைப் பற்றிய இலக்கணத்தைக் கூறுவதாகும். சுருங்கச் சொன்னால் வாழ்வின் நன்மை தீமை ஆகிய தன்மைகளைப் பற்றிய இலக்கணம் ஆகும்.

**கல்வி**

**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு (குறள்.392)**

என்பது கல்வியின் இன்றியமையாமையினை எடுத்தியம்பும் 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்' என்னும் பொன்மொழியும் இதனையே வற்புறுத்தும். கல்வியுடையவர்களே கண்ணுடையவர்கள் கல்வியற்றவர்கள் முகத்தில் இரண்டு புண்ணுடையவர்கள். ஆகவே உலகத்தில் உயர்ந்த செல்வமாகிய கல்விச் செல்வத்தை அடைவதே சிறப்பாகும். கல்வியின் சிறப்பைப் பற்றி தமிழ் மறை இயற்றிய திருவள்ளுவர் 'கல்வி' என்னும் ஓர் அதிகாரத்தை வகுத்தளித்துள்ளார். கல்வியானது செல்வத்தைப் போல் அழியாது. திருடர்களால் திருடவோ தீ, வெள்ளம் முதலியவற்றால் அழியவோ செய்யாது. கொடுக்கக் கொடுக்க பெருகுமே அன்றி குறையாது என்கிறார்.

**குஞ்சி அழகும் கொடுந்தாணைக் கோட்டழகும்**
**மஞ்சள் அழகும் அழகு அல்ல நெஞ்சத்து**
**நல்லம் யாம் என்னும் நடுவு நிலைமையால்**
**கல்வஅழகேஅழகு. (நாலடியார்.கல்வி.1.ப.131)**

கல்வி ஒரு மனிதனின் ஆளுமையுடன் தொடர்புடையது. ஆளுமை வளர்ச்சிக்கும் கல்வியே இன்றியமையாதது. என்பது "நெஞ்சத்து நல்லல யாம் என்னும் நடுவு நலைமையால் கல்வி அழகே அழகு" என்கிறது.

கல்வி மக்கள் அடைய வேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப் பேறுகளை அள்ளி அளிக்கும். அயல் நாடுகளிலும் நற்புகழை நிலைநாட்டும். துன்பம் வந்துற்ற போது அதை நீக்கி இன்பம் எய்தச் செய்யும். என்கிறது. நாலடியார் கல்வியின் சிறப்பைக் கூறும் போது

**உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே**
**பிறப்பு ஓர் அன்ன உடன் வயிற்று உள்ளும்**
**சிறப்பின் பாலால் தாயும் மனம் திரியும்**
**ஒரு குடி பிறந்த பல்லோர் உள்ளும்**
**மூத்தோன் வருக என்னது அவருள்**
**அறிவு உடையோன் அது அரசும் செல்லும்**
**வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்**
**கீழ்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பால் ஒருவனும் அவன் கண் படுமே (புறநானூறு கூறும் அரிய உரைகள்.ப.57)**

இவ்வாறு நாலடியார் கல்வி கற்பதனால் அடையும் சிறப்பை எடுத்துக் கூறும் போது பெற்ற தாயும் கல்வி கற்ற பிள்ளையையே மிகவும் விரும்புவாள் அவனையே மதிக்கவும் செய்வாள் என்பதை மிக அருமையாகக் கூறுகிறது.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

இத்தகைய சிறப்பு வாய்ந்த கல்வியை ஏழைப் பெண்ணின் வழியாக வாழ்வில் நிறைவு பெறச் செய்கிறார் எழுத்தாளர் குமாரசெல்வா. விளவங்கோடு வட்டாரத்தில் இருளி என பட்டப் பெயர் சூட்டப்படடு ஒதுக்கி வைக்கப்பட்ட பெண்ணே கல்வியின் சிறப்பை உணர்ந்து தன்னுடைய வளர்ப்பு மகள் சுந்தரியை ஆசிரியர் பயிற்சி வரை படிக்க வைக்கிறாள். கல்லூரி கட்டணம் கட்ட இயலாத நிலமை ஏற்பட்ட போது தான் குடியிருந்த வீட்டின் மரத்தால் செய்யப்பட்ட தட்டுபடிகளை விற்று கல்வி கட்டணம் கட்ட கொடுக்கிறாள்.

ஒரு சமயம் கோவிலுக்குச் சென்ற இருளியின் வளர்ப்பு மகள் சுந்தரியிடம் கோவில் பூசாரி கேட்கிறார்.

**"என்ன படிக்கிறேள்"**

**"பி.எட்"**

**"தேவஸ்தானம் காலேஜிலா"**

**"ஆமா." (குன்னிமுத்து நாவல்.ப.39)**

விளவங்கோடு வட்டார மக்கள் கல்வியறிவில் பின்தங்கி இருந்த காலகட்டத்தில் ஏழை விதவைப் பெண்ணே கல்வியின் சிறப்பை உணர்ந்து தன்னுடைய வளர்ப்பு மகளை ஆசிரியர் பயிற்சிக்கு படிக்க வைத்த நிகழ்வை சுட்டிக் காட்டி ஆசிரியர் கல்வியின் சிறப்பை விளக்குகிறார்.

**ஒழுக்கம்**

ஒழுகுவது ஒழுக்கம் சான்றோர் உயர்ந்தோர் காட்டிய வழியே ஒழுகுவதாகும். உலகத்தோடு ஒட்ட ஒழுகுவது ஒழுக்கம். நாம் எதைச் செய்து கொள்ள விரும்புகிறோமோ அதை பிறருக்கும் விரும்பச் செய்ய பழகுவது ஒழுக்கம். தீமை போக்குவது ஒழுக்கம்.

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**

**உயிரினும் ஓம்பப் படும் (குறள்.131)**

ஒருவன் ஒழுக்கமாக இருந்தால் அவன் வாழ்வில் உயர்வை அடைவான். உயர்வை அடைய விரும்பும் ஒவவொருவரும் தங்களுடைய உயிரை விடவும் ஒழுக்கத்தை பெரிதாக மதித்து காப்பாற்ற வேண்டும், என்கிறார் வள்ளுவர். ஒழுக்கம் என்பது எண்ணத்தாலும் சொல்லாலும் செயலாலும் தூய்மையாக நடந்து கொள்வதே ஆகும். இத்தகு ஒழுக்கமே மனிதனை மனிதனாக்கி தெய்வமாகவும் உயர்த்தும் வல்லமை வாய்ந்தது. ஆகவே ஒழுக்கம் உயிரைக் காட்டிலும் மிக உயர்வானது.

முதுமொழிக் காஞ்சி ஒழுக்கம் பற்றி கூறும் போது

**ஆர்கலி உலகத்து மக்கட்கெல்லாம்**

**ஓதலிற்சிறந்ததுஒழுக்கமுடைமை (முதுமொழிக் காஞ்சி.பா.எண். 1. ப. 165)**

கடலால் சூழப்பட்ட இவ்வுலகத்தில் வாழ்கின்ற மக்களெல்லாம் கல்வி கற்பதை விடவும் உயர்வானது ஒழுக்கமாக வாழ்வதே ஆகும் . என்று முதுமொழிக் காஞ்சி கூறுகிறது.

இத்தகைய ஒழுக்கத்தையே எழுத்தாளர் குமாரசெல்வா தன்னுடைய குன்னிமுத்து நாவலில் இருளி என்னும் விதவைப் பெண்ணின் வழியாக உலகிற்கு அறிவுறுத்துகிறார். இருளி என்பவள் தன்னுடைய உடல் ஊனத்தின் காரணமாக மற்ற பெண்களைப் போல வாழ முடியாதவளாக இருக்கிறாள். ஆனாலும் ஒரு காலகட்டத்தில் வண்டாளம் வேலையன் என்பவனால் காதலிக்கப்பட்டு

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

குடும்ப வாழ்வை மேற்கொள்கிறாள். ஆனால் அவள் குழந்தை பெறக் கூடிய தகுதியற்றவளாகையால் தன்னுடைய கணவனாலே வெறுக்கப்பட்டு அடித்து நொறுக்கவும்படுகிறாள்.

இவற்றையெல்லாம் கவனத்தில் கொண்ட அவளுடைய கணவனின் நண்பன் நடராஜன் அவளைத் தவறான முறையில் உறவு கொள்ள ஆசைப்படுகிறான். பலமுறை முயன்றும் முடியவில்லை. எனவே அவளைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் அவள் கணவனிடம் சொல்லிக் கொடுத்து அடிபட வைக்கிறான். மேலும் எப்படியாவது அவளைத் தன் வலையில் விழு வைக்க பல முயற்சிகள் செய்கிறான். ஒருநாள் வயல்வெளியில் அவளைக் காண்கிறான். அவளை வழிமறித்து சில செய்திகள் கூற வேண்டும் என்கிறான். அவளை விடாமல் வழிமறித்து நிற்கிறான். அவளோ:

**"எனக்குப் போணும் வழிவிடுங்க." என்கிறாள்.**

**"ஏன் நிண்ணு பேசமாட்டியா" என்கிறான்.**

**"பாக்கியவிய தப்பா நெனப்பினும் " என்கிறாள்.**

**"ஒன்ன யாரும் அப்பிடி நெனச்சமாட்டினும்." என்கிறான்.**

**"பெரியயோக்கியம்காட்டாதே. என்கிறான். (குன்னிமுத்து நாவல்.ப.219)**

இவ்வாறெல்லாம் நடராஜன் இருளிக்கு பல வழிகளிலும் பலவிதமான தொந்தரவுகள் கொடுத்த போதிலும் இருளி எந்த விதத்திலும் தன்னுடைய ஒழுக்கத்திலிருந்து தவறவில்லை. ஒழுக்கமாக வாழ்ந்தாள் என்பதை ஆசிரியர் கூறி ஒழுக்கத்தின் சிறப்பை வெளிப்படுத்தியுள்ளார்.

**மனிதநேயம்**

மனிதநேயம் என்பது எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்துவதாகும். முனித பண்பில் மகத்தானது மனித நேயம். வுள்ளுவர் மனிதநேயம் மிக்கவர் எனவேதான் தன் குறள்களில் மனிதன் மனிதநேயம் மிக்கவனாக வாழ்வதற்கான வழிமுறைகளை பல அதிகாரங்களில் குறிப்பிட்டுள்ளார்.

**இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண**

**நன்னயம் செய்து விடல் (குறள்.314)**

என்ற குறளில் ஒருவன் செய்த தவற்றினை அவனுக்கு உணர்த்துவதிலும் அவனுக்கு தண்டனை தருவதிலும் கூட மனிதநேயத்தோடு நடந்து கொள்ள வேண்டும் என்கிறார். மேலும்

**அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்(கு)**

**என்புதோல் போர்த்த உடம்பு (குறள்.80)**

அன்பு நிறைந்த உள்ளத்துடன் இயங்குவதே உயிருடன் கூடிய உடலாகும். ஆன்பு நெஞ்சம் இல்லாத உடல் உயிரற்ற எலும்முக் கூட்டைத் தோலால் போர்த்திய வெற்றுடல் ஆகும் என்கிறார்.

பிற உயிர் படுகின்ற துன்பம் கண்டு உள்ளுருகி ஆற்றாது நைந்து தம் கைப்பொருள் உதவுவோரை வள்ளல் என்பர். இரக்கப் பண்பின் உருவமாகத் திகழும் வள்ளல்கள் பிற உயிர் பொருட்டு தம் உடம்பின் தசை அரிந்துஈன்று தம் தலையை அரிந்து கொள்ளவும் வாள் கொடுப்பர். கொடுப்பதில் அறிவாராட்சி செய்யாது மடம்படுவர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த வள்ளலார் நடந்து செல்கையில் மாரி பொய்த்தனை கண்டார். நெற்பயிரும் பிற விளைபயிரும் விளையாமற் போகுமே எனக்கருதினார். இவற்றை நம்பியிருக்கும் உயிர்களெல்லாம் நாளை பசியால் துயருறுமே என கலங்கினார்.

**வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்**

**E-ISSN: 2581-7140**
**Vol. 3, Special Issue 1, July - 2020** Available at: www.ijtlls.com

**வாடினேன் பசியினால் இணைத்தே**

**வீடுதோ றிரந்தும் பசியறாது அயர்ந்த**

**வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்**

**…இளைத்தவர்தமைக்கண்டேஇளைத்தேன் (இலக்கியவாழ்வியல் நெறி.ப.5)**

இதே இரக்கக்குணத்தை மனிதநேயத்தை எழுத்தாள் குமாரசெல்வா தன்னுடைய நாவலில் இருளி வழியாக வெளிப்படுத்தியுள்ளார்.

இருளியை அவள் கணவன் வண்டாளம் வேலையன் அடித்து வீட்டை விட்டு விரட்டிய பின்னர் அவள் தனியாக யாருடைய துணையுமின்றி வாழ்ந்து வருகிறாள் ஆனால் வண்டாளம் வேலையன் கொண்டோடி என்ற பெண்ணை வீட்டில் கொண்டு வைத்து குடும்பம் நடத்தினான். சில வருடங்களில் வண்டாளம் வேலையன் பிறரால் அடித்துக் கொல்லப்பட்டான். கொண்டோடி இன்னொருவனோடு ஊரை விட்டு ஓடிவிட்டாள். கொண்டோடிக்;கும் வண்டாளத்துக்கும் பிறந்த சுந்தரி என்ற மகள் எங்கு செல்வது என்று தெரியாமல் சாலையில் அனாதையாக நின்று அழுத போது சுந்தரி ஓடிச்சென்று குழந்தையை அழைத்துச்சென்று தன் பிள்ளையாக வளர்க்கிறாள்."ஜீவகால பரியந்தம் இனி உனக்கு நான்தான் அம்மா எனக்கு நீதான் மகள்" என்கிறாள். இதில் அவளது மனிதாபிமானத்தை காணமுடிகிறது.

மேலும், ஒருசமயம் தக்கலை அரசு மருத்துவ மனைக்கு குழந்தை மருத்துவத்தில் பெயர் பெற்ற பதுக்கடை பங்கிராஸ் வைத்தியர் வந்த போது ஏழை வீட்டு குமந்தை ஒன்று தொப்பிள் கொடி வழியாக இரத்தம் எல்லாம் வெளியேறி சாகும் தருவாயில் இருந்ததைக் கண்டார். அதைக் கண்ட வைத்தியர் மனமிரங்கி உடனே மருந்து செய்து கொடுத்து குழந்தையின் உயிரைக் காப்பாற்றினார். ஆதன் பின்னர் குழந்தையின் தாய் அந்நிகழ்வைக் கூறும் போது "ஒரு சொட்டு நெய் உள்ள போனதும் பிள்ள 'கியாவ்' எனச் சத்தம் போட்டு கசறத் தொடங்குவான் பாரும் வைத்தியரே எனக்க தங்கம் ரெத்தம் எல்லாம் பெய் எப்பிடி கெடந்தது. தெரியுமா? செத்து போவ பாத்துது."(குன்னிமுத்து நாவல்.ப.97. ஆசிரியர். குமாரசெல்வா) என்கிறாள். எழுத்தாளர் குமாரசெல்வா மனிதாபிமானம் என்பதை இந்நிகழ்வின் வழியாக வெளிப்படுத்துகிறார்.

**நட்பு**

**முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து**

**அகநக நட்பது நட்பு (குறள்.786)**

நட்பு என்பது ஒருவன் மற்றொருவனிடம் முகம் மலரும் படி பேசினால் அது நட்பாகாது. உண்மையான நட்பு என்பது அடுத்தவனுக்கு ஒரு துன்பம் வரும் போது அது தனக்கே ஏற்பட்ட துன்பம் போல கருதி அவனுக்கு உதவ வேண்டும். உயர்ந்த நட்பு என்பது அவனுடைய முகம் மலரும் படி பேசினால் மட்டும் போதாது. மனதாலும் அவன் மகிழும் படி நட்பு கொள்ள வேண்டும். அதுவே உயர்ந்த நட்பாகும். எனவே நட்பு என்பது தன்னால் இயன்ற அளவு அவனுக்கு உதவி செய்து முகத்தாலும் மனதாலும் தானும் அவனும் மகிழும் படி இருப்பதே உயர்ந்த நட்பு. நட்பு என்பது முகம் மட்டும் மலரக் கூடாது. மனமும் மகிழும் படியாக இருக்க வேண்டும். அதுவே உண்மையான நட்பாகும். ஏன வள்ளுவர் கூறுகிறார்.

இதே நட்பு குன்னிமுத்து நாவலிலும் வெளிப்புடவதைக் காணமுடிகிறது. குன்னிமுத்து நாவலின் கதாபாத்திரமான தங்கநாடான் என்பவனின் மூலமாக ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். ஒருசமயம்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

தங்கநாடானின் மகன் சிறுவயதில் பள்ளிக்கூடம் செல்லும் போது மானத்தை மறைக்க சரியான துணி இல்லாமல் ஓட்டை நிக்கருடன் (கிழிந்த ஆடை) செல்கிறான். சகமாணவர்கள் சிரிப்பார்கள் என்பதற்காக மதிய உணவு கூட வாங்கச் செல்லாமல் இருந்த இடத்திலே இருக்கிறான். இதனை அறிந்த சமையல் வேலைக்குச் சென்ற இருளி வெளிநாட்டிலிருந்து கோதுமை வரக்கூடிய பையில் ஆடை தைத்து அந்த பையனின் மானத்தை மறைக்கிறாள். இதனை அறிந்த தங்கநாடான் மிகவும் மகிழ்ச்சியடைகிறான்.

பலவருடங்கள் தாண்டி தங்கநாடானின் மகன் படித்து வெளிநாட்டில் வேலைக்குச் செல்கிறான். ஆனால் இருளியின் வளர்ப்பு மகளோ தன்னுடைய வாலிப வயதில் கோவில் பூசாரியின் காதல் வலையில் சிக்கி அவனால் கற்பை இழந்து அவமானத்துக்குள்ளாகிறாள். அவளை இனி யார் திருமணம் செய்து கொள்வார்கள் என்று கலங்கிக் கொண்டு இருந்த போது தங்கநாடான் தன்னுடைய மகனுக்கு இருளியின் மகளை திருமணம் செய்து கொள்ள நினைக்கிறான். அதை இருளியிடம் நேரடியாகவே கேட்கிறான்.

**“பயலுக்கு ஒருவாடு சம்மந்தங்க வருது. ஏனக்க ஆலோசனை என்னாண்ணா சுந்தரிய ஒண்ணு ஒனக்கிட்ட கேட்டுப் பாக்கலாமாண்ணு தோணிச்சி” (*குன்னிமுத்து* நாவல்.ப.420)**

என்கிறார். இருளி சுந்தரிக்கு ஏற்பட்ட அவமானத்தைக் கூறுகிறாள். ஆதற்கு தங்கநாடான் கூறுகிறார் “அதெல்லாம் எனக்கு தெரியும் தினேசுக்கும் தெரியும். அவனுக்கும் செரி எனக்கும் செரி அதெல்லாம் ஒரு விசயமே இல்ல”.என்கிறார்.

இந்நிகழ்வுகளின் வாயிலாக தங்கநாடானின் செயல்களைப் பார்க்கும் போது அவன் இருளியிடமும் அவள் வளர்ப்பு மகள் சுந்தரியிடமும் கொண்ட நட்பானது அகநக நட்பாக அமைகிறது என்பதை அறியமுடிகிறது.

**அன்புடைமை**

**அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ்? ஆhவலர்**
**புன்கணீர் பூசல் தரும் (குறள்.71)**

ஒருவர் உள்ளத்தில் கொண்டிருக்கும் அன்பினைத் தாழ்பாள் இட்டு அடைத்து வைக்க இயலாது. ஆன்பரின் துன்பத்தைக் காணும் போது சிந்திடும் கண்ணீர் துளியே அநத அன்பை பலரும் அறியச் செய்துவிடும்.

இனிமையான இன்பமான வாழ்க்கைக்கு அடிப்படையானது அன்புதான். ஆன்பினால் அகிலத்தையே வெல்லலாம். அத்தகைய அன்புடைய நெஞ்சங்களைப் பெற்றவர்களின் குணமே உயர்வாகும் என்கிறார் வள்ளுவர். ஆவர்களால் அந்த அன்பினை மறைக்கவே முடியாது. இந்த அன்பினைக் கொண்டவர்கள தான் என்ற அகம்பாவம் இன்றி எல்லாமே மற்றவர்களுக்காக எண்ணுவர். இவர்கள் பிறவி எடுத்ததே பிறரை அன்பு செய்வதற்காக. இப்படிப்பட்ட அன்பு அன்ப என்ற செலவில்லாத செல்வத்தைப் பகிர்ந்து கொள்ளும் போது பிறரிடத்து நட்பு என்ற உயர் செல்வத்தை பெறும் பாக்கியத்தை பெறுவர். மேலும் அன்பு இல்லாதவர்கள் சந்திக்க வேண்டிய கொடுமைகளையும் சித்தரிக்கிறார்.

ஒருவன் தோற்றத்தில் எவ்வளவு தான் அழகாக இருந்தாலும் மனதில் அன்பு என்னும் அழகு இல்லையென்றால் பயன் ஒன்றும் இல்லை. அன்பு என்ற உடைமை இருந்தால் தான் உயிருள்ள உடம்பாக ஏன் உண்மையில் மனிதனாக கருதப்படுவான். இப்படி கூறுவதிலிருந்து அன்பை அடிப்படையாக அனைவரும் கொள்ளத்தக்க ஒன்று என்பதை புரிந்து கொள்ளலாம்.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

இந்த அன்புடைமையை குன்னிமுத்து நாவலில் வெளிப்படுவதைக் காணலாம். நூவலில் வருகின்ற பாச்சாண்டி என்னும் முதியவர் தன்னுடைய மகளான இருளியை மிகவும் அன்பாக வளர்க்கிறார். ஆனால் அவளுடைய உடல் ஊனத்தின் காரணமாக திருமணம் செய்து கொடுக்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்த நிலையில் பங்கிராஸ் வைத்தியர் அவளுக்கு வைத்திய சாலையில் மருந்து இடிக்கும் வேலையும் கொடுத்து அவளை விரும்பிய வண்டாளம் வேலையன் என்பவனிடம் அவளைப் பற்றி எடுத்துக் கூறி தேவையான உதவிகளும் செய்து கொடுத்து அவளைத் திருமணமும் செய்து கொடுக்கிறார்.

திருமணம் ஆன கொஞ்சம் நாளிலேயே அவள் கணவன் அவளை அடித்து துன்புறுத்தினான். மேலும் அவளிடம் இருந்த குறையையும் சுட்டிக்காட்டினான். மேலும் அவனுடைய நண்பன் நடராஜனின் கெட்ட பேச்சுகளைக் கேட்டு மிகவும் துன்புறுத்தினான். ஒருமுறை அவளை அதிகமாக அடித்து துன்புறுத்துவதைக் கண்ட இருளியின் தந்தை பாச்சாண்டி “அய்யோ…எம்ப்ள்ளய எதுக்குப் போட்டு இந்த அடி அடிக்கிதிய? எனக்கு காண பொறுக்கல்லியே…? ஏன்று மனம் நொந்து அழுகிறார் . இந்நிகழ்வு அவருடைய அன்பான உள்ளத்தைக் காட்டுகிறது.

**பண்புடைமை**

உலக நடைமுறை பண்புமிக்க சான்றோரைச் சார்ந்து விளங்குவதால் அது தடையின்றி இயங்குகின்றது. பண்புடையோரின் சார்ப இல்லாது போனால் உலகம் மண்ணுக்குள் மறைந்து அழிந்து ஒழிந்து விடும். ஏன்கிறார் வள்ளுவர். ஒரு மனிதனுக்கு பண்பு மிகமிக அவசியம். பண்பு என்பது ஒவ்வொரு மனிதனிடமும் இருக்கவேண்டிய ஒன்றாகும். அதாவது பண்பு உடையவர்களே இந்த உலகத்தில் மன்தர்களாக மதிக்கப்படுகின்றனர்.அத்தகைய பண்படையவர்கள் இந்த உலகத்தில் வாழ்வதால் மட்டுமே உலகம் நன்றாக இயங்குகின்றது.

*குன்னிமுத்து* நாவலில் வருகின்ற ஆசிரியரான ஸ்டீபன் நற்பண்புகள் கொண்டவனாகக் காணப்படுகின்றான். அடுத்தவர் துன்பம் கண்டு இரங்கபவனாகவும் நியாயத்திற்காக போராடுபவனாகவும் காணப்படுகிறான். வண்டாளம் வேலையன் தன்னுடைய மனைவியாகிய இருளியின் உடல் ஊனத்தைச் சுட்டிக் காட்டி அவளை வீட்டை விட்டு வெளியேற்றி விட்டதை அறிந்த ஸ்டீபன் அவளைத் தன்னுடைய வீட்டிற்கு அழைத்த வந்து தன்னுடைய தாயிடம் ஒப்படைத்து அவளைக் கவனித்துக் கொள்ளும் படி கூறுகிறான். மேலும் அவளுக்கு பள்ளிக்கூட ஆயாவாக வேலையும் வாங்கிக் கொடுக்கிறான். அவளுக்கு வாழ்வதற்கான வழியைத் திறந்து கொடுக்கிறான். மேலும், பள்ளிக்கூடத்தில் பெண் ஆசிரியர்களுக்கு பேறுகால விடுப்பு இல்லாமல் இருந்த போது அவர்களின் துயர் துடைக்க அவர்களுக்காகப் போராடுகிறான். அதற்காகக் கைது செய்யப்பட்டு சிறைக்கும் செல்கிறான்.

ஒருமுறை ஸ்டீபனை சிறையில் பார்க்க வந்த அவனுடைய தந்தையிடம் ஜெயிலர் பேசியபோது “அய்யா இப்பிடி ஒரு மகன் கிடைக்க நீங்க குடுத்து வச்சிருக்கணும் தமிழ் தெரியாத அதிகாரிகளுட்ட பேச இங்கிலீசு தெரியாம நெறய போலீசுகாரங்க கஸ்டப்பட்டாங்க ஏழே நாள்ல அப்படி எல்லாரையும் பேச வச்சிட்டாருண்ண பாருங்களேன்” என்கிறார். இந்நிகழ்வுகளின் வழியாக ஸ்டீபனின் பண்புடைமை உள்ளத்தை அறிந்து கொள்ள முடிகிறது.

**விருந்தோம்பல்**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

ஒரு மனிதனின் அடிப்படைத் தேவைகள் உணவு உடை உறைவிடமாகும் என்பதை நன்கு உணர்ந்த தமமழர்கள் பிறருக்கு உணவு அளித்து விருந்தோம்பி மகிழ்ந்தனர். புhரதப் போரில் பங்கு பெற்றவர்களுக்கு பெருஞ்சோற்று உதியஞ் பெருஞ்சேரலாதன் உணவளித்தான் என்பதை புறநானூறு மூலமாகவும் சிவனடியாரான அப்பூதியடிகள் திருநாவுக்கரசருக்கு உணவளித்து விருந்தோம்பினார் என்பதை பெரிய புராணத்தின் மூலமாகவும் நாம் அறியலாம். விருந்தோம்பல் தமிழர் பண்பாட்டில் தலைசிறந்த ஒன்றாகும் என்பதை வள்ளுவரும் எடுத்துக்கூறியுள்ளார்.

**வருவிருந்து வைகலும் ஓம்புவார் வாழ்க்கை**
**பருவந்து பாழ்படுதல் இன்று (குறள்.83)**

என விருந்தோம்பல் செய்பவர் வாழ்க்கை வறுமையால் அழிந்து போவதில்லை என்றும்

**இருந்துஓம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்துஓம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு (குறள்.81)**

கணவனும் மனைவியும் இல்லத்தில் தங்கியிருந்து குடும்ப நலம் பேணி வாழ்க்கை நடத்துவதன் நோக்கம் என்னவென்றால் தம்மை நாடிவரும் புதியவரை தக்கவாற பேணி அவருக்குத் தேவையான உதவி புரிவது ஆகும் என்கிறார்.

இதனையே *குன்னிமுத்து* நாவலில் வரும் பொன்னையா கம்பவுண்டரின் மனைவி சுகந்தியும் செய்கிறாள்.உதாரணமாக கணவனால் வெறுத்து ஒதுக்கப்பட்ட இருளியை ஸ:டீபன் அழைத்து வந்து தன் தாய் சுகந்தியிடம் ஒப்படைக்கிறான். சுகந்தியும் அவளை அன்போடு அரவணைத்து அவளுக்கு உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க இடமும் கொடுத்து நல்ல முறையில் பாதுகாக்கிறாள். இதனை ஆசிரியர் விருந்தோம்பலின் சிறப்பாகக் கூறுகிறார்.

**முடிவுரை**

"வள்ளவர் கூறும் வாழ்வியல் நெறிமுறைகளும் குன்னிமுத்து நாவலும்" என்னும் இக்கட்டுரையில் வள்ளுவர் கூறிய வாழ்வியல் நெறிமுறைகளான கல்வி ஒழுக்கம் மனிதநேயம் நட்பு அன்புடைமை பண்புடைமை விருந்தோம்பல் என்பவை குன்னிமுத்து நாவலில் எழுத்தாளர் குமாரசெல்வா கதாபாத்திரங்கள் மூலமாக உலகிற்கு எளிய முறையில் வட்டார வழக்கில் வெளிப்படுத்தியுள்ளார்.

**துணைநுற்பட்டியல்**

[1] பா.வளன் அரசு. "திருக்குறள் விளக்கம்", சூரியா பதிப்பகம், 41 த.மு.கட்டிடம், திருநெல்வேலி - 627001.

[2] ஞா.மாணிக்கவாசகன். "நாலடியார்", உமா பதிப்பகம், 18 171. பவழக்காரதெரு, மண்ணடி, சென்னை 600001, முதல் பதிப்பு ஜீலை.1993.

[3] குமாரசெல்வா. "குன்னிமுத்து", காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில் 629001. முதல் பதிப்பு.டிசம்பர்.2012.

[4] வித்துவான் துரை. இராசாராம். "பதினெண் கீழ்கணக்கு", முல்லை நிலையம், 9 பாரதி நகர் முதல் தெரு தீ.நகர் சென்னை – 17.

[5] சோ.குருசாமி. "இலக்கிய வாழ்வியல் நெறி", தாமரைப் பப்ளிகேஷன்ஸ்(பி)லிட், 41---சிட்கோ

**E-ISSN: 2581-7140**
**Vol. 3, Special Issue 1, July - 2020** **Available at: www.ijtlls.com**

இணைடஸ்டிரியல்ஸ் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை- 600098. முதல் பதிப்பு . ஜீலை . 2009.

[6] கைச்.இராமசாமி. “புறநானூறு கூறும் அரிய உரைகள்”, மணிவாசகர் பதிப்பகம். 31. சங்கர் தெரு பாரிமுனை. சென்னை – 800108. முதல் பதிப்பு . 2004.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**லலிதா, யா.** “வள்ளுவர் கூறும் வாழ்வியல் நெறிமுறைகளும் ‘குன்னிமுத்து’ நாவலும்.” *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, இதழ் 1, ஜீலை 2020, பக். 51-59. டிஒஐ: 10.5281/zenodo.3930608.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Lalitha, Y.** “Valluvar’s Life Ethics and the Novel “Kunnimuthu”.” *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 3, no. 1, July 2020, pp. 51-59. DOI: 10.5281/zenodo.3930608.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# *திருக்குறள்* காட்டும் அறிவிலிகள்
# *Thirukkural* on Foolishness

**முனைவர் அ. விமலாராணி**, உதவிப்பேராசிரியர், சி.டி.டி.இ மகளிர் கல்லூரி, பெரம்பூர், சென்னை – 11.
**Dr.A.Vimalarani**, Assistant Professor , Department of Tamil, C.T.T.E College for Women, Chennai – 11.
**ORCiD:** https://orcid.org/0000-0002-3008-2196
**DOI: 10.5281/zenodo.3930612**

## Abstract

*The research article entitled "Thirukkural on Foolishness" is written with the view of bringing out the mind of foolish men that has been taken from pluralistic thoughts in Thirukkural. Two chapters "Naivete" and "Simplemindedness" in Thirukkural are chosen as the specific areas of research. Naladiyar (meaning "Four-Lined Stanzas") composed by Jain saints, Inna Narpathu ("Evil Forty") by Kabilar, "Moothurai" ("Proverbs by Elderly and Experienced People") and "Thanipaadal Thirattu" ("Single Verses Collection") by Avvaiyar, and "Narunthokai" by Athiveeraramapandiyar are used as secondary sources for this study. This paper has been written to clarify the following concepts: who ignorant/foolish people are, characteristic features of their actions, nature of friendship with ignorant/foolish people, the fortune/providence of ignorant/foolish people along with the distress/disaster they would end up in, due to their ignorance/foolishness).*

**Keywords:** *Thirukkural*, Foolishness, Human Life

### முன்னுரை

உலகப் பொதுமறையாக விளங்கக்கூடிய திருக்குறளில் கூறப்படாத கருத்துகளே இல்லை எனலாம். பன்முகப் பாவலனாக விளங்கிய வள்ளுவர் ஒவ்வொரு அதிகாரத்திலும் பல்வேறு சமூகச்சிந்தனைகளை நுணுகி ஆராய்ந்து எடுத்துரைக்கிறார். ஔவையாரும், திருக்குறளை,

**அணுவைத் துளைதேழ் கடலைப் புகட்டிக்**
**குறுகத் தரித்த குறள். (திருவள்ளுவமாலை, பா.55)**

எனப் புகழாரம் சூட்டுகிறார். மாங்குடி மருதனாரும் திருக்குறளின் பெருமைகளைக் குறிப்பிடும் போது, இந்நூல் பயில்வதற்கு மிகவும் எளிமை உடையதாகவும், உணர்வதற்கு மிகவும் அருமை உடையதாகவும், மறைப்பொருளாகவும் விளங்கி குற்றமற்றவர் நினைக்க நினைக்க அவர்தம் உள்ளத்தை உருக்குவதாகவும் குறிப்பிடுகிறார்.

**ஓதற் கெளிதா யுணர்தரு கரிதாகி**
**வேதப் பொருளாய் மிகவிளங்கித் – தீதற்றோ**
**ருள்ளுதோ றுள்ளுதோ றுள்ள முருக்குமே**
**வள்ளுவர் வாய்மொழி மாண்பு. (திருவள்ளுவமாலை, பா.24)**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

எனப் பாடுகிறார். சமூக சிற்பியான வள்ளுவர் கல்வி, கேள்வி போன்ற தலைப்புகளில் ஆராய்ந்து கல்வியின் மேன்மையையும் கல்லாதவர்கள் அடையும் இழிநிலையையும் பல கோணங்களில் குறிப்பிட்டுள்ளார். இத்தன்மைப் போல கல்லாதவர்கள் தங்களைக் கல்வி அறிவு பெற்ற சான்றோர்களுக்கு நிகராகக் கருதுவதால் ஏற்படும் இன்னல்களையும் எடுத்துரைத்துள்ளார். திருக்குறளில் பேதைமை, புல்லறிவாண்மை என்னும் தலைப்புகளில் இடம் பெற்றுள்ள கருத்துக்களை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அறிவிலி யார்?**

தீமையைக் கைப்பொருளாகக் கொண்டு நன்மை தரும் செயல்களைச் செய்யாமல் இருப்பவர்களே அறிவிலி ஆவார். இவர்கள் செய்யதகாதச் செயல்களைச் செய்ய நாண மாட்டார்கள். எதையும் ஆராய்ந்து அறிந்து செய்யும் திறன் அற்றவர்கள். உள்ளத்தில் அன்பில்லாதவர்கள். நன்மை தரும் செயல்களைப் போற்றவும் மறந்தவர்கள். இவர்கள் என்றும் பழிக்குரிய செயல்களைச் செய்வார்கள். புகழுக்குரியவற்றைச் செய்ய மாட்டார்கள் என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். மேலும் கல்வி அறிவுப்பெற்றுப் பலநூல்களைக் கற்றுப் பொருள் உணர்ந்து, அதை மற்றவர்களுக்குப் போதிக்கக்கூடிய கல்வியாளர்கள் அந்நெறிகளைப் பின்பற்றாவிடில் அவர்களைக் காட்டிலும் அறிவிலிகள் வேறு யாரும் இலர் என்றும் குறிப்பிடுகிறார். இதனை,

**ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்**
**பேதையின் பேதையார் இல் ( குறள் . 834)**

என்ற குறள் மூலம் குறிப்பிடுகிறார். நாலாடியாரிலும் இக்கருத்து கூறப்பட்டுள்ளது.

**குலந்தவங் கல்வி குடிமைமூப் பைந்தும்**
**விலங்காமல் எய்தியக் கண்ணும் – நலஞ்சான்ற**
**மையறு தொல்சீர் உலகம் அறியாமை**
**நெய்யிலாப் பாற்சோற்றின் நேர் (நாலடியார், பா.333)**

என்ற பாடல் மூலம் குடிப்புகழ், மெய்ஞ்ஞானம், கல்வியறிவு, ஒழுக்கம், தலைமைப் பொறுப்பு ஆகிய ஐந்து சிறப்புக்களையும் குறைவில்லாமல் பெற்றிருந்தாலும் உலகியல் அறிவு இல்லாமல் இருந்தால் அது நெய்யே இல்லாமல் பாற்சோறு பொங்குவதைப் போன்றது எனக் குறிப்பிடுகிறார்.

**சிற்றறிவாளர்களின் தன்மைகள்**

சிற்றறிவு எனப்படுவது யாது என்றால் ஒருவர் தன்னை எல்லாம் அறிந்தவன் என நினைத்துக் கொள்ளுதலே ஆகும்.

**கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென்(று)**
**உற்ற கலைமடந்தை ஓதுகிறாள் (தனிப்பாடல் திரட்டு, பா.39)**
**அறிஞர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல் (நறுந்தொகை, பா.14)**

என்ற வரிகளை எல்லாம் இத்தகையோர் ஆராய்ந்து பார்ப்பதில்லை. தாம் பெற்ற குறைந்த அறிவினைக் கொண்டு தன்னைப் பேரறிவாளனாகக் கருதுவதால், தன்னைச் சார்ந்தவர்களையும் ஏழுபிறவிகளுக்குப் புதைக்குழியில் தள்ளுமளவுக்குத் துன்பத்தை உண்டாக்குவர் என்பதை,

**ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்**
**தான்புக் கழுந்தும் அளறு ( குறள். 835)**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

என்ற குறள் மூலம் வெளிப்படுத்துகிறார் வள்ளுவர்.

**அறிவிலிகள் பெரும் செல்வநிலை**

அறிவிலிகள் பெருஞ்செல்வம் பெற்றால் கள்ளுண்டு மயங்கியவர் அடையும் நிலையை அடைவர் என்று கூறுகிறார் வள்ளுவர். அச்செல்வத்தைத் தகுந்த முறையில் பயன்படுத்த அவர்களுக்குத் தெரியாது. நுட்பமான அறிவு இன்மையால், இம்மை மறுமை பயன்களை அடையும் பொருட்டு, அறவோர்க்கு உணவளித்தல் ஏழைகளின் பசிப்பிணி நீக்குதல், விருந்தோம்பல் முதலான நற்பண்புகளுக்குரிய செயல்களுக்குச் செல்வத்தைச் செலவிடார். ஒரு வீட்டில் உள்ளவர்களிடம் கல்வி அறிவு இல்லை என்றால் அந்த வீடு செல்வத்தையும் புகழையும் இழக்கும். தீராத பழி வந்து சேரும் என்பதைப் பாரதிதாசனும் தமது ‘ இருண்ட வீடு’ காவியத்தில் காட்டியுள்ளார். இத்தகைய அறிவிலி பெற்ற பெருஞ்செல்வத்தால் அண்டை அயலார் பசியாறுவார்கள். அவனைச் சார்ந்தவர்கள் பசியால் வருந்துவார்கள் என்பதனை,

**ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை**

**பெருஞ்செல்வம் உற்றக் கடை ( குறள். 837)**

என்ற குறள் மூலம் வெளிப்படுத்துகிறார்.

**அறிவிலியின் நட்பு**

நட்பிற்கு இலக்கணம் கண்டவர் வள்ளுவர். அறிவுடைய சான்றோர்களின் நட்பு நாளும் வளரும் பிறை போன்றது. அறிவிலாதக் கீழோரின் நட்பு தேயும் பிறை போன்றது என்கிறார் வள்ளுவர். கற்றறிந்த புலவர்கள் தம் பணி முடிந்தவுடன் அவ்விடத்தை விட்டுப் பிரிந்து வேறு இடம் சென்று அங்குத் தம் அறிவின் புலப்பாட்டினை வெளிப்படுத்துவர் என்பதனை,

**உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்**

**அனைத்தே புலவர் தொழில் (குறள். 394)**

எனக் கூறிய வள்ளுவர் அறிவிலர் நட்பு என்பது எத்தகைய தன்மையுடையது என்பதனை, அறிவிலிகளின் நட்பு அவரை விட்டுப் பிரியும் போது யாதொரு துன்பத்தையும் தராது என்பதனைப்,

**பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்**

**பீழை தருவதொன் றில் ( குறள். 839)**

என்ற குறள் மூலம் குறிப்பிடுகிறார்.

**அறிவிலியின் செயல்கள்**

நுட்பமான அறிவு இல்லாதவர்களுக்கு, நல்லனவற்றை அறிவிக்கும் அறிவுடையவனும் அறிவில்லாதவனாகவே தோன்றுவான். அவன் தன்னை மட்டுமே அறிவுடையவனாகக் கருதி தான் காணாததை எல்லாம் கண்டதாகவே கூறுவான். அதைக் கேட்கக்கூடிய மற்றொரு அறிவிலி அவன் சொன்னதை அப்படியே நம்புவான் என்பதைக்,

**காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்**

**கண்டானாம் தான்கண்ட வாறு ( குறள். 849)**

என்ற குறள் மூலம் குறிப்பிடுகிறார். இத்தகைய அறிவிலிகள் பிறர் சொல்வதைச் செவிமடுக்க மாட்டார்கள். தானாக உணர்ந்தும் எந்த ஒரு செயலையும் செய்ய மாட்டார்கள். இவர்கள் தனக்கு மட்டுமன்றி தன்னைச் சார்ந்த சமூகத்திற்கும் நோய் போன்றவர்கள் ஆவார். நாலடியாரிலும் இத்தகு

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

அறிவிலிகளின் செயல்கள் குறித்து கூறப்பட்டுள்ளது. அதில், நிறைந்த கல்வி ஞானமும், உயர்ந்த குடிப்பெருமையும் சுற்றி சூழ்ந்தவர்கள் புகழப் பெருமை பெறும். இத்தகு பெருமை இல்லாதவர்கள் தங்கள் பெருமையைத் தாங்களே தம்பட்டம் அடித்துப் பிறருக்கு வெளிப்படுத்துவர். இத்தகையோரை மருத்துவர் கூடி மருந்தளித்தாலும் தேற்றமுடியாத பித்தநிலையை அடைந்தவர்களாகவே கருத வேண்டும் என்பதை,

**கற்றனவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்**
**பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும் தானுரைப்பின்**
**மைத்துனர் பல்கி மருந்தின் தணியாத**
**பித்தனென் றெள்ளப் படும் (நாலடியார், பா.340)**

என்ற பாடல் இக்கருத்தை உணர்த்துகிறது.

**அறிவிலி பெறும் துன்பங்கள்**

அறிவிலிகள் தம்நிலை உணர்ந்து தம்மை அறிவுடைய சான்றோருக்கு நிகராக உயர்த்திக் கொள்ள முயல வேண்டும். தெளிந்த ஞானமும் நிறைந்த அறிவும் உயிர்களிடத்தில் அன்பும் கொண்ட இத்தகையோரின் அறிவுரைகளைக் கேட்டு பின்பற்றினால் போதும், அறியாமை அகன்று அறிவொளி தோன்றும். இதை விடுத்து இவர்கள் செய்யும் செயல்கள் எத்தகைய கேடு தரும் என்பதனை இன்னா நாற்பது குறிப்பிடுகிறது,

**கல்லார் உரைக்கும் கருமப்பொருள் இன்னா (இன்னாநாற்பது, பா.15)**
**ஆன்(று) அவிந்த சான்றோருள் பேதை புகல் இன்னா (இன்னாநாற்பது, பா.17)**
**வல்லாதான் சொல்லும் உரையின் பயன் இன்னா (இன்னாநாற்பது, பா.28)**

மேற்கண்ட வரிகள் மூலம் அறிவிலார் சொல்லும் அறவுரையும், சான்றோரிடத்து அறிவிலிகள் சொல்லும் கருத்தும், கல்வியில் வல்லமை இல்லாத மூடன் சொல்லும் பொருளும் துன்பத்தைத் தரும் எனக் கூறப்படுகிறது. வள்ளுவரும், அறிவிலாதவர்கள் தம்மால் இயலாதது என உணர்ந்திருந்தும், அச்செயலை செய்யாமல் விடார். இத்தகையோர் அளவற்ற துன்பத்தை அடைவர் எனக் குறிப்பிடுகிறார். மேலும் கற்றறிந்த அறிஞர் கூட்டத்துடன் அறிவிலான் ஒருவன் புகுதலைக், கழிவை மிதித்துக் காலைக் கழுவாமல் படுக்கையில் வைப்பது போன்றது என்று கடிந்துரைக்கின்றார்.

**கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்**
**குழாஅத்துப் பேதை புகல் (குறள். 840)**

என்ற குறள் இக்கருத்தை விளக்குகிறது. அறிவிலிகளின் தன்மைகளை அறிவுடைமை அதிகாரத்திலும் குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர். அறிவுடையவர்கள் எந்த ஒரு செயலையும் ஆராய்ந்து அறிந்து செய்வர். வரும் முன் காப்போம் என்ற சிந்தனைக் கொண்டவர்கள். தமக்கு நேரிடும் துன்பத்தையும் இன்பமாகக் கருதி மீண்டு வரும் தன்மை இத்தகையோர்க்கு உண்டு. அறிவிலாதவர்களுக்கு அத்தன்மை இல்லை என்பதை வள்ளுவர்,

**அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்**
**அஃதறி கல்லா (குறள். 427)**
**எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை**
**அதிர வருவதோர் நோய் (குறள். 429)**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

மேற்கண்ட குறள்கள் வாயிலாக அறிவுடையார் பெறும் பேறுகளைக் குறிப்பிடுகிறார். அறிவிலார் இத்தகு மேன்மையினைப் பெற மாட்டார்கள். சான்றோர்களின் சான்றாண்மை குணத்தை இவர்கள் அறியார். இத்தகையோரை மனிதப்பேயாகக் கடிந்துரைக்கின்றார். இதனை

**உலகத்தார் உண்டென்ப தில்என்பான் வையத்**

**தலகையா வைக்கப் படும் (குறள். 850)**

என்ற குறள் மூலம் தெளிவுப்படுத்துகிறார்.

**அறிவிலி அடையும் இழிநிலை:**

நுட்பமான அறிவுத்திறன் பெற்றிராத அறிவிலிகள் தாம் கல்லாத நூல்களை எல்லாம் தான் கற்று உணர்ந்தது போலவே பேசுவார்கள். இதை அடையாளம் தெரிந்து கொண்டவர்கள் உண்மையில் அவர்கள் ஒரு நூலைக் கற்றறிந்தாலும் அதையும் கல்லாத தன்மை கொண்டதாகவே கருதி இழிவுப்படுத்துவர் என்பதை வள்ளுவர்,

**கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற**

**வல்லதூஉம் ஐயம் தரும் (குறள். 845)**

என்ற குறள் மூலம் வெளிப்படுத்துகிறார். மேலும் இவர்கள் தம்மிடத்து இருக்கக்கூடிய இக்குற்றத்தை நீக்கிக் கொள்ள கருதாமல் மானத்தை மறைத்துக் கொள்வது ஏனோ? என்று கடிந்துரைக்கிறார். இதன் மூலம் மானத்தைக் காட்டிலும் சிறந்தது அறிவு நுட்பத்துடன் செயல்படுவது என்பதனை எடுத்துரைக்கிறார். இதனை,

**அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்**

**பெருமிறை தானே தனக்கு (குறள். 846)**

என்ற குறள் காட்டுகிறது.

நல்வழிக்கான அறிவுரைகளைச் சான்றோர்கள் கூறக் கேட்டு அதன் வழி நடக்காமல், தான் கொண்ட சிற்றறிவின் வழி நடக்கின்றவன் தனக்குத் தானே பெருந்தீங்கு புரிபவன் ஆவான் என்கிறார் வள்ளுவர். நாலடியாரிலும் கற்றோர் கூடியிருக்கும் சபை நடுவே சென்று ஒருவன் அங்குள்ள கற்றோரை வைதால் அவர்கள் இவனின் சிற்றறிவினை எண்ணி அதைப் பொருட்டாகக் கொள்ள மாட்டார்கள். அதையும் அறிவிலி தனக்குச் சாதகமாகக் கருதினால் பின் பெருந்தீங்குக்கு ஆளாவான் என்பதை,

**எய்தி யிருந்த அவைமுன்னர்ச் சென்றெள்ளி**

**வைதான் ஒருவன் ஒருவனை; - வைய**

**வயப்பட்டான் வாளா இருப்பானேல், வைதான்**

**வியத்தக்கான் வாழும் எனின். (நாலடியார், பா. 325)**

என்ற பாடல் மூலம் உணர முடிகிறது.

**முடிவுரை**

சான்றோன் வள்ளுவனின் குறள் உலக முழுவதும் தமிழரின் பெருமைகளையும், நுண்மாண் நுழை புலத்தையும் வெளிப்படுத்தும் குரலாகவே அமைந்துள்ளது எனலாம். மேற்கண்ட கட்டுரை மூலம் அறிவிலிகளின் செயல்பாட்டினை உணர முடிகிறது.

**கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி**

**தானும் அதுவாகப் பாவித்துத் தானுந்தன்**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**பொல்லாச் சிறகைவிரித்(து) ஆடினால் போலுமே**
**கல்லாதான் கற்ற கவி (மூதுரை, பா. 15)**

என்ற பாடலும் இக்கருத்தினை மேலும் திறம்பட எடுத்துரைக்கின்றது. அறியாமை என்பது ஒரு இருளே அன்றி தீர்க்க முடியாத நோய் அல்ல என்பதனை அறிவிலிகள் உணர்ந்தாலே இந்நிலை மாறி சான்றோர் பெரும் பெறற்கரிய பேறுகளைப் பெறுவர் என்பது திண்ணம்.

**துணைநூல் பட்டியல்**

[1] கு. மோகனராசு. (உரையாசிரியர்). "திருவள்ளுவர் – திருக்குறள்", மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600108 , முதல்பதிப்பு – சனவரி – 1994

[2] அதிவீரராம பாண்டியர். "நறுந்தொகை".

[3] நீதி நூல்கள்.வலைப்பதிவு.காம், டிசம்பர் – 2012. http://jagadhguru-needhinoolgal.blogspot.com/2012/12/91.html

[4] ஔவையார் – "மூதுரை", http://www.edubilla.com/tamil/moothurai/

[5] துரை. தண்டபாணி(உரையாசிரியர்). "கபிலர் – இன்னா நாற்பது", உமா பதிப்பகம், 18, பவளக்காரத்தெரு, மண்ணடி, சென்னை – 600001, முதற்பதிப்பு – டிசம்பர் – 2010

[6] சங்கபுலவர்கள் – திருவள்ளுவ மாலை, https://ta.wikipedia.org/s/ai2

[7] சமணமுனிவர்கள் – நாலடியார், ஞா. மாணிக்கவாசகன் – உரையாசிரியர், உமா பதிப்பகம், 18, பவளக்காரத்தெரு, மண்ணடி,சென்னை – 600001, ஆறாம்பதிப்பு – டிசம்பர் – 2010

[8] புலவர் அ. மாணிக்கம் - தனிப்பாடல் திரட்டு, பூம்புகார் பதிப்பகம் 63, பிராட்வே, சென்னை – 108, நான்காம் பதிப்பு – ஜீலை – 1996.

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

**விமலாராணி, அ.** "திருக்குறள் காட்டும் அறிவிலிகள்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, இதழ் 1, ஜீலை 2020, பக். 60-65. டிஓஐ: 10.5281/zenodo.3930612.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Vimalarani**, **A.** "Thirukkural on Foolishness." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 3, no. 1, July 2020, pp. 60-65. DOI: 10.5281/zenodo.3930612.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

# வள்ளுவன் கண்ட (ஒரே) தொழில்
# The Only Occupation Seen by Thiruvalluvar

**முனைவர் கா.ஸ்ரீதர்**, உதவிப்பேராசிரியர், வி.இ.நா.செ.நா.கல்லூரி, விருதுநகர்.
**Dr.K.Sridhar,** Assistant Professor of Tamil, VHNSN Colllege, Virudhunagar,
ORCiD: https://orcid.org/0000-0003-3243-8149
**DOI: 10.5281/zenodo.3930622**

## Abstract

*The first occupation of humanity is Ploughing. The one and only occupation described by 'POIYAMOZHI PULAVAN' valluvan is Ploughing. The farmers explained by Valluvan lived like – 'Irappar' 'Irapparkku onru Evaar','Uzhuthundhu valvarre Valvar' ('farmers are the ones who gives food to the people otherwise they die', 'the one who thinks farming is divine could do the famimg in life'). But in this 21 st century, the government ignores the peasants. The traders fix the price for the cultivated products of the farmers. The loss of income due to the natural disaster, lack of income for labour, lack of value in the society make the educated young generation of farmers look for some other fields other than cultivation. This article aims at explaning the solution for the above.*

**Keywords:** Occupation, Farming, Thiruvalluvar

### அறிமுகம்

உலகிற்குத் தமிழைப் பறை சாற்றி வரும் பல அடையாளங்களுள் குறிப்பிடத்தக்க ஒன்றாய் திருக்குறள் திகழ்கிறது. இது தனிமனிதன் முதல் மாபெரும் வேந்தன் வரை அனைவரும் பின்பற்ற வேண்டிய இன்றியமையாத கருத்துகளைக் கொண்டுள்ளது. திருக்குறளின் உள்ளடக்கத்தையும் பயன்பாட்டையும் அறிந்தே வெள்ளிவீதியார் இதை, '**பொய்யா மொழி**', என்று சுட்டியுள்ளார். அந்த அடைமொழிக்கேற்ப காலம் கடந்தும் பொய்த்துப் போகாமல் நிலைபெற்று இருக்கும் திருக்குறள் உழவுத்தொழில் தவிர்த்து வேறு எந்தத் தொழிலையும் குறிப்பிடவில்லை. அதிகாரத்தை நிரல்படுத்திய அறிஞர்களும் '**குடிசெயல்வகை**'யை அடுத்து **'உழவு'** அதிகாரத்தை வைத்துள்ளனர். மேலும் '**உழவு**' இல்லையேல் சமூகத்தில் '**நல்குரவு**' ஏற்படும் என்பதை இலைமறைக் காயாய், நுண்ணிதின் உணர்த்தவே உழவு அதிகாரத்தைத் தொடர்ந்து நல்குரவு இடம்பெற்று இருக்கிறதோ என்று எண்ணுவதற்கு வாய்ப்பாக உள்ளது. குறள் விவரித்துள்ள (ஒரே) தொழிலின் மேன்மையையும் முக்கியத்துவத்தையும் நிகழ்காலத் தேவைக்கேற்ப காணவேண்டிய மாற்றங்களையும் விவரிப்பதாக இவ்வாய்வு அமைகிறது.

### முதல் தொழில் / முதன்மைத் தொழில்

உழவு, தொலைநோக்குப் பார்வையில் சேவையாகவும் பொருளாதாரப் பின்புலத்தில் தொழிலாகவும் திகழ்கிறது. பழங்கால மனிதன் நிலையான இருப்பிடத்தை ஏற்படுத்திக் கொள்ளாமல்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

உணவுத் தேவையை வேட்டையால் பூர்த்தி செய்து கொண்டு நாடோடி வாழ்க்கை வாழ்ந்து உள்ளான். இவன் நீரையும் நிலத்தையும் இணைத்து மேற்கொண்ட உழவால் அடிப்படையான உணவுத் தேவையை நிவர்த்தி செய்து, நிலையான உறைவிடத்தில் வாழத் தொடங்கி உள்ளான். உணவுத் தேடலையே வாழ்க்கையாகக் கொண்ட உலக உயிர்களில் மனிதன் மட்டும் உழவால் தனது உணவைச் சுயமாக உற்பத்தி செய்யும் ஆற்றல் பெற்றான். அதனால் இந்த உழவுத்தொழில்,

**மனிதனை மற்ற மிருகங்களில் இருந்து மேம்பட்டவனாக மாற்றிஉள்ளது.** (https://www.facebook.com/927318660709202/posts/1208094379298294) 28.4.2020, 2.15 pm என்று கருதலாம். மனிதன் (தமிழன்) உழவால் உணவு, உடை , உறைவிடம், பொழுதுபோக்கு, வழிபாடு போன்றவற்றை உருவாக்கிப் பண்பட்ட வாழ்க்கையை வரையறுத்துக் கொண்டான். மனிதயினத்தின் பரிணாமம் உழவில் தொடங்குகிறது. அதனாலே ஜான்சன் என்பவர்,

**உழவை அறிவியல்களில் எல்லாம் உயர்ந்த அறிவியல்** (https://www.facebook.com/927318660709202/posts/1208094379298294) 2.5.2020, 10.20.am என்று குறிப்பிட்டு இருக்கிறார். மேற்கண்ட காரணிகளால் உழவை முதல் தொழில் எனவும்,

**சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம்:**
**அதனால் உழந்தும் உழவே தலை (குறள். 1031)**

என்ற வள்ளுவனின் குறளால் முதன்மைத் தொழில் எனவும் வரையறை செய்யப்படுகிறது

**உழவுத்தொழில்**

மனிதன் தனது முழு உடல் உழைப்பையும் இயற்கையிடம் வழங்கி அது தரும் வளங்களால் பசியாறி, உடை உடுத்தி, உறைவிடத்தை அமைத்துக் கொண்டு வாழ்கிறான். உலகில் உள்ள (தாவர மற்றும் மாமிச உயிர்கள்) அனைத்திற்கும் இன்றியமையாத் தேவையான உணவின் அமுதசுரபியாய் நிலமும் நீரும் திகழ்கிறது. இதை, **'உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே'** (புறநானூறு, பா.48, வரி.21**)** என்ற புறநானூற்று வரிகள் வாயிலாக அறியலாம். தொடக்ககாலத்தில் மனிதன் பறவைகள், விலங்குகளைப் போன்று வேட்டைச் சமூகமாகவே வாழ்ந்து வந்தான், அவன் நிலத்தையும் நீரையும் இணைத்து உணவு உற்பத்திக் கலையைக் (அறிவியலைக்) கற்று அறிந்ததால் எஞ்சிய உயிரினங்களை ஆட்சிபுரியும் வல்லமையைப் பெற்றுள்ளான். தேவநேயப் பாவாணர் **"உழவுத்தொழிலைக் கற்றது தமிழரின் முதல் தொழில் கல்வி"** (தேவநேயப் பாவாணர், பண்பாட்டுக் கட்டுரைகள், ப. 96) என்று குறிப்பிடும் வகையில் மனிதன் மண்ணையும் நீரையும் உற்றுநோக்கி கேள்வி மற்றும் கற்றல் வழியாகவும் இளையோர் மூத்தோரிடம் இருந்து குடி வழியிலான கற்றல் மூலமாகவும் உழவுத்தொழில் நடைபெற்றிருக்கிறது.

வள்ளுவர் உழவுத்தொழிலின் அடிப்படையாக உழவு செய்தல், எரு (உரம்) இடுதல், நீர் பாய்ச்சுதல், காவல் புரிதல் என நான்கை குறிப்பிட்டுள்ளார். இந்த நான்கும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாகும் என்பதை,

**ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு (குறள். 1038)**

என்ற குறள் வழியே அறியலாம். உழவுத் தொழிலில் ஈடுபடும் வேளாளர்கள் பலர் ஆகவும் அத்தொழில் வழியே கிடைக்கப் பெற்ற விளை பொருளை வாணிகம் செய்யும் வணிகர்கள் சிலர் ஆகவும் இருப்பதைப்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

பரிமேலழகர், "**சிறுபான்மை வணிகருக்கும் பெரும்பான்மை வேளாளருக்கும் உரித்தாய உழுதல் தொழில்**" (திருக்குறள் ஆராய்ச்சி பதிப்பு பதிப்பாசிரியர் கி.வா.ஜகந்நாதன், ப.539) என்றும் குறிப்பிட்டுள்ளார். முழுக்க முழுக்க இயற்கை சார்ந்த உழவுத்தொழிலில் நிலம் மற்றும் உடல் உழைப்பால் உழவர்கள் பெறும் வருவாயைக் காட்டிலும் பொருளாதார வளம் பெற்ற வணிகர்கள் அதிகமான வருவாயைப் பெறுவதை நிகழ்காலத்திலும் காணமுடிகிறது

**உழவின் சிறப்பு**

"**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**" (புறநானூறு, பா.18.அடி எண்.19) என்ற புறப்பாடல் வழியே உழவர்களை உலக உயிர்களைக் காக்கும் வாழும் தெய்வங்கள் ஆவர் என்பதை உணர்த்துகிறது. அறிவியல் வளர்ச்சியால் உலகம் குக்கிராமம் ஆகலாம்: வேற்று கிரகங்களுக்கும் பயணம் மேற்கொள்ளலாம்: வாழ்க்கைமுறை மாறலாம். ஆனால் உணவுக்கு உழவையும் உழவனையுமே எதிர்நோக்க வேண்டும். இது இல்லறத்தில் விருப்பம் கொண்டு வாழ்பவர்களுக்கு மட்டுமல்ல. உலகமே நிலையாமை: உலக இன்பமும் நிலையாமை என்பதை உணர்ந்து மனத்தளவிலும் வேட்கை கொள்ளாமல் வாழும் துறவிகளுக்கும் பொருந்தக் கூடியதாகும்.

**உழவினார் கைம்மடங்கின் இல்லை விளைவதூஉம்**
**விட்டேம்என் பார்க்கும் நிலை (குறள். 1036)**

என்ற குறள் வழி அறிய முடிகிறது. உழவர்கள் மட்டுமே நுகர்வோர் யார்? எத்தகையவர்? எந்த மதம்? எந்த இனம்? என்றெல்லாம் சிந்திக்காமல் கருமமே கண்ணாக உழைக்கின்றனர்.

**இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்**
**உழவிடை விளைப் போர் (சிலப்பதிகாரம், நாடுகாண் காதை, பாடல் அடி. 149,150)**

என்ற சிலப்பதிகார வரிகள் வாயிலாக உழவர்கள் இரப்போர் சுற்றத்தையும் அரசரது வெற்றியையும் தம் உழவுத் தொழிலால் விளைவிக்கக் கூடியவர்கள் என்பதை அறியலாம். உணவு உற்பத்தி என்பது தனிமனிதன் மற்றும் வீட்டோடு முடியக் கூடியது அன்று. நல்லதொரு சமூகம் மற்றும் மன்னனின் வெற்றியையும் தீர்மானிக்கக் கூடிய வல்லமை பெற்றதாகும். மேலும் ஒரு நாட்டின் வாழ்விலும் முன்னேற்றத்திலும் உழவுக்கு முக்கியப் பங்குண்டு என்பதை பண்டைத் தமிழர்கள் உணர்ந்தவர்களாக இருந்ததை அறியமுடிகிறது. பிறருக்குச் சிறிதும் பயனின்றி உயிருடன் இருப்பவர்கள் எல்லாம் வாழ்பவர்களாகக் கருதமுடியாது: கருதவும்கூடாது. தன்னைச் சார்ந்தவர்களுக்கும் தான் வாழும் சுற்றத்திற்கும் பயன்தரும் வகையில் இருப்பவர்களை வாழ்பவர்களாகக் கருதலாம். வள்ளுவரின்,

**உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்**
**தொழுதுண்டு பின் செல்பவர் (குறள்.1033)**

என்ற குறள் வழியே அனைவரும் உண்ணும் வகையில் உழவு செய்து அதன் வழியே தாமும் உண்டு வாழ்வதே வாழ்க்கையாகும். எஞ்சிய அனைவரும் பிறரை வணங்கி அதனால் கிடைக்கப் பெறுவதை உண்பவர்கள். அதனால் இவர்கள் உண்டபின் அவருக்குப் பின் செல்கின்றனர் என்ற பொருளைப் பெற முடிகிறது. ஒரு மனிதனின் அத்தியாவசியத் தேவையாக உணவு இருப்பதால் அதை உற்பத்தி செய்யும் உழவும் உழவர்களும் பெருமைக்குரியவர்களாக உள்ளனர்.

**உழவின் பின்புலம்**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

உழவுத்தொழில் எதிர்கொள்ளும் இடர்ப்பாடுகளுள் ஒன்றாக நீர் இன்மையால் ஏற்படும் வறட்சி உள்ளது. வானம் பார்த்த பூமியாக இருந்தாலும் நீர்வளம்மிக்க நன்செய் பூமியாக இருந்தாலும் உழவர்கள் தொடர்ந்து இயங்கிக்கொண்டே தான் இருப்பர். இருப்பினும்,

**நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்**

**வான்இன்று அமையாது உலகு (குறள்.20)**

என்ற வள்ளுவனின் வாக்கு மனிதனுக்கு மட்டுமின்றி உழவுக்கும் பொருந்தக் கூடியதாகும். மழை பொய்த்துப் போகும் நிலையில் உழவர்கள் நிலத்தை ஏர் கொண்டு உழ மாட்டார்கள் அதன் நீட்சியாக தானிய உற்பத்தி குறைந்து உணவு பற்றாக்குறை ஏற்படும். உழவின் பின்னணியில் நீரின் தேவை இருப்பதை,

**ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்**

**வாரி வளங்குன்றிக் கால் (குறள்.14)**

என்ற குறள் மெய்ப்பிக்கும். உழவர்கள் நீர் இருப்பின் அடிப்படையிலேயே உழவை மேற்கொள்ள முடியும்.சில பருவங்களில் மழை பொய்த்துப் போவதும் உண்டு. அக்கால உழவர்கள் மழையின் வருகையை அறியும் பட்டறிவைப் பெற்றிருந்ததை,

**ஆற்று வெள்ளம் நாளை வரத்**

**தோற்றுதே குறி - மலை**

**யாளமின்னல் ஈழமின்னல்**

**சூழ மின்னுதே**

**நேற்றும் இன்றும் கொம்பு சுற்றிக்**

**காற்று அடிக்குதே கேணி**

**நீர்ப்படு சொறித் தவளை**

**கூப்பிடுகுதே**

**சேற்று நண்டு சேற்றில் வளை**

**ஏற்று அடைக்குதே - மழை**

**தேடி ஒருகோடி வானம்**

**பாடி ஆடுதே... (முக்கூடற்பள்ளு, பா.30)**

என்ற முக்கூடற் பள்ளுப் பாடல் வழியே அக்காலத்தில் திட்டமிட்ட கல்வி முறை இல்லாத நிலையிலும் இயற்கை குறித்த உற்றுநோக்கல் அதிகமாக இருந்திருக்கிறது என்பதை அறியமுடிகிறது அக்கால மக்கள் வானில் காணும் குறிகள், தவளை நண்டு போன்ற உயிரினங்களின் செயல்பாடுகள், காற்றின் மாறுபட்ட சுழற்சிமுறை போன்றவற்றைத் தொடர்ந்து கவனித்து மழைப்பொழிவை முன்னரே கணிக்கும் ஆற்றல் பெற்றவர்களாக இருந்திருக்கின்றனர்.

**இடிக்கிற வானம் பெய்யாது,**

**தவளை கத்தினால் தானே,**

**மாலை தட்டான் பறந்தால் கிட்ட மழை,**

**மாலை கொசுக்கடி மழையைக் கொண்டுவரும்** (http://poovulagu.in/?p=468) 2.5.2020, 10.40 am

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

என்பன போன்ற பழமொழிகள்/சொல்லாடல்கள் இன்றும் மக்களின் பேச்சு வழக்கில் உள்ளன. மேற்கண்ட சான்றுகளை நோக்குகையில் உழவுத் தொழிலுக்குத் தொழில் சார் அறிவு மட்டுமின்றி இயற்கை மீதான உற்றுநோக்கலும் தேவை என்பதை உணர முடிகிறது.

**உழவும் உழவரும்**

பறவை, விலங்கு போன்று அன்றாட உணவுத் தேவையை மட்டுமே பூர்த்தி செய்து கொண்டிருந்த மனிதன் உழவை மேற்கொள்ளத் தொடங்கிய பின்னர் அவனிடம் பிறரது தேவையையும் பூர்த்தி செய்ய வேண்டும்: சேமிக்க வேண்டும்: இருப்பைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பன போன்ற எண்ணம் எழுந்தது. மோட்டார் வாகனத்தின் இயக்கத்திற்கு மின்சாரத்தின் தேவை எவ்வளவு இன்றியமையாதது என்பதை அதன் மின்சேமிப்புக் கலனில், **தினமும் என்னை கவனி** என்று எழுதப்பட்டு இருக்கும் வாசகமே உணரச்செய்யும். உழவருக்கும் நிலத்திற்குமான உறவு கணவன், மனைவி உறவைப் போன்றதாகும் என்பதை,

**செல்லான் கிழவன் இருப்பின் நிலம் புலந்து**
**இல்லாளின் ஊடி விரும் (குறள். 1039)**

என்ற குறள் உணரச்செய்யும். மேலும் இக்குறள் வழியே உழவன் தனது நிலத்தை நாள்தோறும் சென்று பார்த்து செயல்படாமல் சோம்பல் கொண்டிருந்தால் அவனது வாழ்க்கைத் துணையான முரண்பட்ட மனைவியைப் போன்று அவனுடன் வெறுப்பு கொண்டு ஊடல் புரிந்து வாழாமல் அவனது வாழ்வையும் புரளவிட்டு விடும் என்பதையும் அறியலாம். **செய்யும் தொழிலே தெய்வம்** என்று புலனால் அறியமுடியாத தெய்வத்தைக் குறள் சான்று காட்டாமல் தொழில் செய்பவனுக்கும் தொழில் மேற்கொள்ளும் இடத்திற்கும் உள்ள உறவு பிரிக்க முடியாத கணவன்-மனைவி உறவுக்கு இணையானது என்று குறிப்பிட்டிருப்பது எதார்த்த வாழ்க்கைச் சான்றாகும்.

சங்கப்பாடல்கள் மன்னன், வள்ளல் மற்றும் புரவலர்களைப் **பசிப்பிணி மருத்துவன்** என்று குறிப்பிடும் வழக்கம் உண்டு. சான்றாக,

**பசிப்பிணி மருத்துவன் இல்லம்**
**அனைத்தோ? செய்த்தோ? கூறுமின் எமக்கே (புறநானூறு, பா.70. அடி எண்.9,10)**

என்ற புறநானூற்றுப் பாடலைச் சான்றாகக் கூறலாம். இன்று உழவர்களையே **பசிப்பிணி மருத்துவர்** என்று குறிப்பிட வேண்டும் என்பது ஆய்வாளரின் எண்ணமாகும்

**நெருக்கடி காலத்தில் உழவு**

உலக உயிர்கள் அனைத்திற்கும் காற்று, நீர் மற்றும் உணவு இன்றியமையாதவையாகும். உணவு உற்பத்தியில் எந்த நாடு தன்னிறைவு பெற்றதாக இருக்கிறதோ அது வளமான, வலிமையான நாடாகும். அதனாலே பழங்காலத்தில் போரில் வென்ற மன்னன் பகைநாட்டு வயல்களைத் தீயிட்டு அழித்தும், கழுதை பன்றிகள் பூட்டிய ஏர் கொண்டு உழுது அந்நாட்டின் முன்னேற்றத்தைத் தடுத்து இருக்கிறான். இதற்கு,

**நல்ஏர் நடந்த நசை சால் விளைவயல்**
**பன்மயிர்ப் பிணவொடு கேடில் உகள (மதுரைக்காஞ்சி, பாடல் அடி. 173,174)**

என்ற மதுரைக்காஞ்சிப் பாடல் வழியே நல்ல ஏர் பூட்டி உழுது வயல்களைக் காட்டுப்பன்றி கொண்டு உழுததை அறியலாம். பழங்காலத்தில் போரின் பொருட்டு பகைவர்களால் அதிகமாக மக்களும்

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

வயல்களுமே பாதிக்கப்பட்டு இருக்கின்றன என்பதை அறிய முடிகிறது. **பெஞ்சும் கெடுக்கும் காஞ்சும் கொடுக்கும்** என்ற மழை குறித்தப் பழமொழி இன்றும் மக்களின் பேச்சு வழக்கில் உள்ளது.

உழவுத் தொழில் இயற்கைச் சீற்றத்தாலும் பகை: தொழில் போட்டி போன்ற காரணமாக செயற்கையாகவும் பாதிக்கப்படுகிறது. இருப்பினும் உழவர்களின் விடாமுயற்சி, தொழில்சார் ஈடுபாடு, கடமை போன்றவற்றால் எத்தகைய வறண்ட பூமியும் வளமாய் மாறிவிடுகிறது. தற்பொழுது கொரோனா நோயினால் மக்களும் அனைத்து தொழில்களும் முடங்கினாலும் உழவர்களும் உழவுத் தொழிலும் தொடர்ந்து இயங்கிக் கொண்டு இருப்பதைக் காணலாம்.

**உழவும் அரசும்**

பள்ளிப் பருவத்தில் வரலாற்றுப் பாடத்தில் அசோக மன்னன், குளங்களை வெட்டினார். மரங்களை நட்டினார். சாலைகள் அமைத்தார் என்று இடம்பெற்றிருக்கும். இதன் வழியே மக்களை ஆளும்; நல்வழி காட்டும் மன்னன் நீர், உணவு உற்பத்திக்கு முக்கியத்துவம் தரவேண்டும் என்பதை அறியலாம். பழங்காலத்தில் நீரையும் உணவையும் மருந்து என்று குறிப்பிடும் வழக்கம் இருந்ததை,

**இருமருந்து விளைக்கும் நல்நாட்டுப் பொருநன்**
**கிள்ளி வளவன் நல் இசை உள்ளி (புறநானூறு, பா.70 வரிகள்.9,10)**

என்ற கோவூர்கிழாரின் வரிகள் மூலம் அறியலாம். இரு மருந்தான நீரும் உணவுப் பொருளான நெல்லும் மக்களுக்கு உயிர் அல்ல. மண்ணை ஆட்சிபுரியும் மன்னன் தான் மக்களுக்கு உயிர் ஆவான் என்பதை உணர்த்துவதாக ,

**நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தல் உலகம் (புறநானூறு, பா.186 வரிகள்.1, 2 )**

என்ற புறப்பாடல் அமைந்துள்ளது. இன்றும் மழைப் பொலிவையும் உணவு உற்பத்தியையும் அமைச்சர்களின் நாடாளும் திறத்தோடு ஒப்பிடும் வழக்கமுண்டு.

தலைமைப் பொறுப்பில் இருப்பவரின் பண்பிற்கும் நாட்டின் வளத்திற்கு தொடர்பு இருப்பதாக மக்கள் நம்புகின்றனர். ஒரு நாட்டின் வளர்ச்சியில் தலைவனின் திட்டமிடல் அதனை நடைமுறைப்படுத்துதல் எனப் பல படிநிலைகள் இருக்கின்றன. ஒரு மன்னன், அவன் செல்லுகின்ற நாட்டிலுள்ள செல்வங்களைப் பெற விரும்பினால் (ii) பிற நாடுகளை ஆளும் தலைமையின் வலிமையை அழித்து அவன் ஒருவனே ஆள விரும்பினால் (iii ) உனது நல்ல புகழை இவ்வுலகில் நிலைநிறுத்த விரும்பினால் அதற்கு
என்ன செய்ய வேண்டும் என்பதை குடபுலவியனார்,

**செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்**
**ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி**
**ஒருநீ ஆகல் வேண்டினும் சிறந்த**
**நல் இசை நிறுத்தல் வேண்டினும் மற்றதன்**
**தகுதி கேள்இனி மிகுதி யாள… (புறநானூறு பா 18 வரி. 13 முதல் 17 )**

என்று வினாவாக எழுப்பி அதற்கான வழியை,

**நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே;**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**உண்டி முதற்றே உணவின் பிண்டம்;**
**உணவெனப் படுவது நிலத்தோடு நீரே;**
**நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**
**உடம்பும் உயிரும் படைத்திசி னோரே;**
**வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகன்**
**வைப்பிற்று ஆயினும் நண்ணி ஆளும்**
**இறைவன் தாட்கு உதவாதே; அதனால்**
**அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே**
**நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்**
**தட்டோர் அம்ம இவண்தட்டோரே**
**தள்ளா தோர்இவண் தள்ளா தோரே (புறநானூறு பா. 18 வரி. 18 - 30 )**

என்று குறிப்பிட்டு உள்ளார்.

பருவ மழையை எதிர்பார்த்து இருக்கும் புன்செய் நிலங்களால் நிலைத்த வருவாயைப் பெற இயலாது. பெரிய அளவில் புன்செய் நிலங்கள் இருந்தாலும் நாட்டின் தலைமையின் பொருளாதார வளத்திற்குப் பயன்படாது. அதனால் குழிந்த இடங்கள் தோறும் நீர்நிலை பெருகச் செய்தல் வேண்டும் அவ்வாறு செய்தால் இவ்வுலகில் தமது புகழ் நிலை வரும். இன்றைக்குப் பெரும்பாலும் அனைத்து நாடுகளுமே தொழில் வளர்ச்சியே நாட்டின் பொருளாதாரத்தை வளமாக்கும் என்று எண்ணுகின்றன. ஆனால் நீர் வளத்தைப் பெருக்கி உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்று ஏற்றுமதி செய்யும் நிலை ஏற்பட்டால் அதுவே என்றைக்கும் வீழ்ச்சி இல்லாத நிலையான வளர்ச்சியாகும். தொழில் வளத்திலும் ஆயுத பலத்திலும் மேலோங்கி இருந்தாலும் உணவுத் தேவைக்குப் பிறரைச் சார்ந்து இருப்பது வளர்ச்சி கிடையாது. தொலைநோக்குப் பார்வையில் இது நிலையானதும் கிடையாது.

**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனாக** இருந்தாலும் மக்கள் அனைவரிடமும் நன்னடை நிலை பெறுவதற்கும் உலகநாடுகள் அத்தியாவசியத் தேவையான உணவுக்கு நம்மைச் சார்ந்து இருப்பதற்கும் நீர் நிலைகளைப் பெருக்கி உணவு உற்பத்தியில் வளர்ச்சி அடைய வேண்டும். யதார்த்த உலகில் தொழில் வளர்ச்சியால் காற்று, நீர், நிலம் மாசடைந்து வருகிறது. கொரோனா நோய் பரவல் காரணமாக அறிவிக்கப்பட்ட ஊரடங்கால் தொழிற்சாலைகள் இயங்காத நிலையில் நீர்நிலைகளும் காற்று மண்டலமும் தூய்மை ஆகிவருவதை ஊடகங்களும் சமூக ஊடகங்களும் தொடர்ந்து பதிவு செய்து வருவது குறிப்பிடத்தக்கதாகும். இயற்கையை மாசுபடுத்திப் பெறும் பொருளாதார வளத்தை வளர்ச்சி என்று எங்ஙனம்கூறமுடியும்.

ஒவ்வொரு தனிமனித வாழ்விலும் வளர்ச்சியிலும் அரசுக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ பங்கு: தொடர்பு உண்டு. இதில் அத்தியாவசியத் தேவையான உணவை உற்பத்தி செய்யும் உழவர்களின் வாழ்வில் அரசுக்கு முழுமையானத் தொடர்பும் : பொறுப்பும் உள்ளது. இவர்களின் வீழ்ச்சி மக்களை நேரடியாகவும் சற்று காலதாமதமாகவும் பாதிக்கக் கூடியதாகும். ஆனால் அரசு இதற்காக அளவிட முடியாத இழப்பைத் தரவேண்டியிருக்கும்.

**விவசாயச் சந்தையில் அரசால் கொண்டு வரப்பட்ட தேவையற்ற கட்டுப்பாடுகளால் (2000 - 2017) 17 ஆண்டுகளில் ரூபாய் 45 இலட்சம் கோடிகளை இந்திய விவசாயிகள் இழந்துள்ளனர்"**

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com

**(இந்து தமிழ் திசை நாளிதழ், மதுரை பதிப்பு 16.04.2020. ப.6)**

என்று வேளாண் பொருளியல் அறிஞர் அசோக் குலாத்தி மதிப்பிட்டுள்ளார். இதன் மூலம் வேளாண்மைத் தொழில் தொடர்ந்து பொருளாதார நெருக்கடியில் இருப்பதை அறிய முடிகிறது.

**உழவின் உயர்வுக்கு**

வேளாண்மைத் தொழில் தற்பொழுது இயந்திர மயமாகி விட்டாலும் அதிகமான வருவாய் கிட்டாத உடல் உழைப்பு சார்ந்ததாகும். ஆனால் வேளாண்மையை முழுமையாகச் சார்ந்திருக்கும் வணிகர்கள் எவ்வித உடல் உழைப்புமின்றி பொருளை மட்டும் முதலீடு செய்து அதிகமான வருவாயைப் பெறுபவர்களாக உள்ளனர். பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே உழவு குறித்துப் பரிமேலழகர், "**மேல்குடி உயர்தற்கு ஏது** " (திருக்குறள், பதிப்பாசிரியர் கி. வா.ஜகந்நாதன் ப, 539). என்று குறிப்பிட்டு உள்ளார். இதன்மூலம் உழவுத்தொழில் உடலுழைப்பு கொண்ட வேளாளர்களைவிட உடல் உழைப்பு இல்லாத வணிகர்களின் உயர்வுக்கே பெரிதும் துணையாக உள்ளது என்பதை அறியமுடிகிறது. இந்நிலை 21ஆம் நூற்றாண்டிலும் மாறவில்லை.

தொழில் வளர்ச்சி, நகரமயமாக்கல், மேற்கத்தியத் தாக்கம், அரசின் பாராமுகம் போன்றவற்றால் உழவுத்தொழில் மதிப்பிழந்து வருகிறது.

**இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது**
**கைசெய்தூண் மாலை யவர் (குறள். 1035)**

உழவர்களை 'இரவார்' என்றும் 'இரப்பார்க்கொன்று ஈவார் என்றும் குறள் பதிவு செய்துள்ளது.

**வள்ளுவர் வாழ்ந்த காலத்தில் 'இரவார்' என்று இருந்த உழவர்கள் தற்போது அரசிடம் மானியம், மின்சாரம், கடன், விதை, உரம் என்று வாழ்நாள் முழுக்க இ(ற)ரந்து கொண்டு இருக்கிறார்கள். 'இரப்பார்க்கு ஒன்று ஈவர்' என்று இருந்த உழவர்கள் இரந்து (யாசித்து) கேட்கிறேன் கடனைத் தள்ளுபடி செய்து எனக்கு வாழ்க்கையை ஈ என்று இர(ற)க்கிறார்கள்**

**(அஞ்சிறைத் தும்பி இதழ், தொகுதி 1 ப. 92)**

என்பதாகவே தற்போது உழவர்களின் வாழ்க்கை நிலை உள்ளது. இதன் நீட்சியாக உழவுச் சமூகம் தமது பிள்ளைகள் படித்து வேறு பணிக்குச் செல்வதை விரும்புகிறது. இந்நிலை தொடர்ந்தால் (சிறு குறு விவசாயிகளின்) வேளாண்மை அழிந்துவிடும். இத்தொழிலும் பணம் படைத்த பெரும் முதலாளிகளிடம் சிக்கிக் கொள்ளும்: பிற விவசாயிகள் கூலித் தொழிலாளர்களாகமாறிவிடுவர்.

படித்த விவசாயிகளின் பிள்ளைகள் வேறு பணிக்குச் செல்வதை விடுத்து, வேளாண்மைப் பொருட்களைச் சந்தைப்படுத்தும் வணிகத்தையும் மதிப்புக்கூட்டி விற்கும் தொழிலையும் மேற்கொண்டால் பொருளாதார வளத்தையும் சமூக மதிப்பை பெற முடியும்.

உழவர்களைப் போன்றே படிப்பறிவற்ற மீனவர்களின் வாழ்க்கையும் உள்ளது. இம் மீனவர்களின் வாழ்க்கையைப் பின்னணியாகக் கொண்ட ஆறுகாட்டுத்துறை புதினம்,

**நெட்டி, பீலியின் விலையை இன்னதென்று யாவாரிகள் யாரும் முடிவாய்ச் சொல்வதில்லை.. . ...உயிரைப் பணயம் வைத்து கடலில் மிதந்து மட்சம் பிடிப்பவனுக்கு ஒரே பங்குதான். வலியில்லாமல் பிடித்ததை வந்து வாங்கிச் செல்வனுக்கும் ஒரேபங்குதான்..." நம்ம ஜனங்க ஒழைப்பு இந்த ஊருக்குத் தான் சேரணும்" என்று சொல்லி சமுத்திரவள்ளியை நெட்டி, பீலி எடுக்கச் சொல்லி இருந்தான் அருள்தாசு. வாரத்தில் ஒருமுறை புதன்கிழமை மட்டும் அவற்றை**

**E-ISSN: 2581-7140**
**Vol. 3, Special Issue 1, July - 2020** **Available at: www.ijtlls.com**

> **மொத்தமாய் வந்து எடுத்துச் செல்ல வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யும் பெரிய கம்பெனி ஒன்றுடன் ஒப்பந்தம் செய்து இருந்தான். (சு.தமிழ்ச் செல்வி, ஆறு காட்டுத்துறை, ப.271)**

என்பதாகத் தீர்வு சொல்லி உள்ளது. உழவர், மீனவர் போன்றவர்களுக்குத் தமது உற்பத்திப் பொருளின் சந்தை மதிப்புத் தெரியாத / அறியாததால் வணிகர்களே விலையை நிர்ணயம் செய்கின்றனர். அதனால் படித்த இளைய தலைமுறையினர் தம் சமூகம் சார்ந்த உற்பத்திப் பொருளின் பல்வேறு பயன்பாட்டையும் மதிப்புக் கூட்டி விற்கும் நுட்பத்தையும் அறிந்து / கற்று செயல்பட்டால் இடைத்தரகர் போன்ற சிலரது சுரண்டலில் இருந்து விடுபட முடியும். மேலும் உழைப்புச் சமூகம் பொருளாதார வளம், சமூக மதிப்பு, சமூக அங்கீகாரத்தையும் பெறும்.

**முடிவுரை**

பொய்யா மொழிப் புலவன், தான் கண்ட (ஒரே) தொழிலான உழவையும் உழவர்களையும் 'உழவே தலை , 'உழுவார் உலகத்தார்க்கு ஆணி, 'இரவார் இரப்பார்க்கொன்று ஈவர்' என்றெல்லாம் பெருமைப்படுத்தி உள்ளான். ஆனால் தற்பொழுது உழவர்கள் தனது உற்பத்திப் பொருளுக்கு விலை நிர்ணயிக்கும் உரிமை இன்றி இடைத்தரகர்கள் மற்றும் வணிகர்களின் பொருளாதாரத்தை வளமாக்கும் இயந்திரமாய் திகழ்கிறார்கள். அரசின் திட்டங்களும் இவர்களுக்கு முழுமையாகக் கிட்டவில்லை. இவர்களின் மௌனக் குமுறல்களும் அரசின் செவிக்குக் கேட்கவில்லை. உலக உயிர்கள் உயிர் வாழ்வதற்கு அத்தியாவசியத் தேவையான உணவுப் பொருளை உற்பத்தி செய்யும் உழவர்களின் வாழ்க்கை இனிதாக இல்லை. கல்வி கற்ற இளைய சமுதாயமும் பொருளாதாரம் மற்றும் சமூக மதிப்பிற்காக வேறு துறைகளை நாடுகின்றனர். மாறாக இவர்கள் தமது குடிவழி உற்பத்திப் பொருளின் முழுமையான பயன்பாட்டையும் மதிப்புக்கூட்டு நுட்பத்தையும் கற்று தொழிலில் ஈடுபட்டால் வளம் பெறுவர் என்பது திண்ணம்.

**துணைநூற் பட்டியல்**

[1] சு.வினோத் & கா.ஸ்ரீதர், (பதிப்பாசிரியர்கள்). "அஞ்சிறைத்தும்பி இதழ் தொகுதி – 1", அஞ்சிறைத் தும்பி பதிப்பகம், விருதுநகர்-626 001.

[2] சு.தமிழ்ச்செல்வி. "ஆறுகாட்டுத்துறை (புதினம்)", NCBH வெளியீடு, சென்னை.

[3] ஜெ.ஸ்ரீசந்திரன் (உரையாசிரியர்), "சிலப்பதிகாரம்", வர்த்தமானன் பதிப்பகம், சென்னை.

[4] முக்கூடற்பள்ளு, கௌரா பதிப்பகம், சென்னை.

[5] கி.வா.ஜகந்நாதன் (பதிப்பாசிரியர்), திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ராம கிருஷ்ண மிஷன் வித்யாலயா, கோயம்புத்தூர்.

[6] பா.வளன் அரசு (உரையாசிரியர்), திருக்குறள், சூர்யா பதிப்பகம், திருநெல்வேலி.

[7] புறநானூறு, NCBH வெளியீடு, சென்னை.

[8] இந்து தமிழ் திசை நாளிதழ், மதுரைப் பதிப்பு, 16.04.2020.

[9] https://www.facebook.com/927318660709202/posts/1208094379298294

[10] http://poovulagu.in/?p=468

**தமிழில் இக்கட்டுரையை இவ்வாறு மேற்கோளிடுங்கள்:**

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Vol. 3, Special Issue 1, July - 2020 Available at: www.ijtlls.com



**ஸ்ரீதர், கா.** "வள்ளுவன் கண்ட (ஒரே ) தொழில்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்*, தொகுதி 3, இதழ் 1, ஜீலை 2020, பக். 66-75. டிஒஐ: 10.5281/zenodo.3930622.

**Cite this Article in English (*MLA 8 Style*) as:**
**Sridhar, K.** "The Only Occupation Seen by Thiruvalluvar." *International Journal of Tamil Language and Literary Studies*, vol. 3, no. 1, July 2020, pp. 66-75. DOI: 10.5281/zenodo.3930622.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி /Author Contribution Statement:** இல்லை /NIL

**கட்டுரையாளர் நன்றியுரை /Author Acknowledgement:** இல்லை /Nil

**கட்டுரையாளர் உறுதிமொழி/Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன்./I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.